# ஸஹாபா பெண்கள்

(ஸஹாபா பெண்களின் வரலாற்றுச் சுருக்கம்)

கேள்வி – பதில்

(மாணவ, மாணவிகளின் பாடத்திற்கு தகுதியானது)

தொகுத்தவர்:

வா. கமாலுத்தீன் ஆலிம்

வெளியீடு :

**ஸலாமத் பதிப்பகம்**

குர்ஆன் மற்றும் இஸ்லாமிய நூல்கள்

பதிப்பாளர், விற்பனையாளர் & ஏற்றுமதியாளர்கள்

95 (புதிய எண் 197), லிங்கிச் செட்டித் தெரு,

முதல் மாடி, சென்னை–600 001.

☎ : 044- 2521 1981, 4216 7320,Tel/Fax: 4216 7781

e mail:salamathbooks@yahoo.com

புத்தக விபரக் குறிப்பு



நூலின் பெயர் : ஸஹாபா பெண்கள்
தொகுத்தவர் : வா. கமாலுத்தீன் ஆலிம்
முதல் பதிப்பு : ஹிஜ்ரி - 1425 - ஸபர்
2004 - ஏப்ரல்
ஆறாம் பதிப்பு : ஹிஜ்ரி - 1433 - ஜமாதுல் அவ்வல்
2012- ஏப்ரல்
ஏழாம் பதிப்பு : ஹிஜ்ரி - 1434 - துல்ஹஜ்
2013 -அக்டோபர்
பக்கங்கள் : 48
கிடைக்குமிடங்கள் : ஸலாமத் புக் ஹவுஸ்
90, லிங்கிச் செட்டித் தெரு,
மண்ணடி, சென்னை-1.
☎ : 044 2521 1981, 4216 7320
ஸலாமத் புக் சென்டர்
(மஸ்ஜிதே மஃமூர் வளாகம்)
168/3, அங்கப்ப நாயக்கன் தெரு,
மண்ணடி, சென்னை-1.
☎ : 044 - 42 35 82 74
விலை : ரூ: 15.00

# வாசகர் கவனத்திற்கு!

அன்புடையீர்!

அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்)

இந்நூல் சிறுவர், சிறுமியரின் இஸ்லாமிய அறிவு வளர்ச்சிக்காகத் தொகுக்கப்பட்டதாகும். வரலாற்று நூல்களில் ஒருவரின் பிறப்பு, இறப்புகள் பற்றிய குறிப்புகள் பலவாறு கூறப்பட்டுள்ளன. மாறுபட்ட கருத்துக்கொண்ட வரலாற்றுக் குறிப்புக்களை இதில் தவிர்த்துள்ளேன்.

ஒருவரின் பிறப்பு பற்றி ஒவ்வொரு வரலாற்று ஆசிரியரும் ஒவ்வொரு வகையாக எழுதியுள்ளனர். இவ்வாறு கருத்து வேறுபாடுகள் கொண்ட பிறப்பு, இறப்புகள் பற்றிய குறிப்புகளை முடிந்த அளவுக்குத் தவிர்த்துள்ளேன்.

சிறுவர்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தி விடும் எந்தக் குறிப்பையும் முடிந்தவரை இதில் சேர்க்கவில்லை.

மேலும், வரலாறுகள் எழுதுவதென்பது கடினமான ஒரு பணியாகும். அதற்கு வரலாற்று நூல் அறிவும், ஆராய்ச்சியும் வேண்டும். என்னிடம் அந்த அளவிற்கு வரலாற்று அறிவோ, ஆராய்ச்சியோ இல்லை என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இளம் சிறார்கள் இஸ்லாமிய வரலாறுகளை அறிந்து கொள்ள வேண்டும் என்ற நன்நோக்கத்துடன் எழுதப்பட்ட இந்தத் தொகுப்பைச் ஸலாமத் பதிப்பகத்தார் வெளியிட முன் வந்துள்ளனர். அல்லாஹ் அப்பதிப்பகத் தாரின் ஆசைகளையும், ஆர்வங்களையும் மேலும் மேலும் ஓங்கச் செய்வானாக!

*எளிய ஊழியன்*
***பாண்டிச்சேரி வா. கமாலுத்தீன் ஆலிம்***

# பதிப்புரை

புகழனைத்தும் அல்லாஹ்விற்கே உரியது. சாந்தியும் சமாதான மும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், அவர்களின் உற்றார் உறவினர் மற்றும் அன்னாரின் தோழர்கள் மீதும் உண்டாவதாக!

அல்லாஹ்வின் மிகப்பெரும் கிருபையினாலும், பல நல்லோர் களின் உளத் தூய்மையான துஆவின் பரக்கத்தினாலும், இதற்கு முன் பல சிறந்த மார்க்க அறிவு நூல்கள் அபூயூஸுப் என்ற பெயரில் தொகுக்கப்பட்டு வெளிவந்துள்ளதை நன்கறிவீர்கள். இப்பொழுது ஆலிஜனாப் வா. கமாலுத்தீன் ஆலிம் அவர்களால் தொகுக்கப்பட்ட 'ஸஹாபாப் பெண்கள்' என்ற நூல் தங்கள் கரங்களிலே உள்ளது.

இந்நூலை ஒவ்வொரு பெண்ணும் படித்துப் பயனடைய எல்லாம் வல்ல அல்லாஹ் நல்லருள் புரிவானாக.

தவறு செய்வது மனிதனின் இயல்பு. எனவே இதில் ஏதும் தவறுகளைக் காண்பவர்கள், எங்களுக்குத் தெரியப்படுத்தினால், மறுபதிப்பில் இன்ஷா அல்லாஹ் திருத்தம் செய்ய ஏதுவாகும். இன்ஷா அல்லாஹ் மென்மேலும் பல நல்ல அறிவு நூல்களைத் தொடர்ந்து வெளியிட எண்ணியுள்ளோம். எல்லாம் வல்ல அல்லாஹ் நம்முடைய எல்லாவிதமான நல்ல முயற்சியையும் ஏற்றுக் கொள்வானாக! ஆமீன்.

***ஸலாமத் பதிப்பகம்***
***சென்னை — 600 001.***

# 1. அன்னை கதீஜா (ரலி)

**கேள்வி : கதீஜா (ரலி) அவர்களின் பட்டப் பெயர் என்ன?**

பதில் : அவர்களின் பட்டப்பெயர் 'தாஹிரா' என்பதாகும்.

**கேள்வி : 'தாஹிரா' என்றால் என்ன பொருள்?**

பதில் : 'தாஹிரா' என்றால் தூய்மையானவர் என்று பொருளாகும்.

**கேள்வி : நபி (ஸல்) அவர்களின் முதல் மனைவியின் பெயர் என்ன? அவர்களின் பிறப்பு, வளர்ப்பு, தாய் தந்தையர் யார்?**

பதில் : நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முதல் மனைவி உம்முல் முஃமினீன் (முஃமின்களின் தாய்) அன்னை கதீஜா ரலியல்லாஹு அன்ஹா என்பவர்கள். கதீஜா (ரலி) அவர்கள் அரபு நாட்டில் மிக உயர்ந்த குரைஷ் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். இவர்களின் தாயார் பெயர் பாத்திமா, தந்தையின் பெயர் குவைலிது என்பதாகும். அன்னை கதீஜா (ரலி) அவர்கள் கி.பி. 555ல் பிறந்தார்கள்.

**கேள்வி : நபி (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) அவர்களை திருமணம் செய்து கொண்ட பொழுது அவர்களின் வயது எவ்வளவு?**

பதில் : நபி (ஸல்) கதீஜா (ரலி) அவர்களைத் திருமணம் செய்து கொண்ட பொழுது கதீஜா (ரலி) அவர்களுக்கு வயது 40. நபி (ஸல்) அவர்களுக்கு வயது 25.

**கேள்வி : நபி (ஸல்) அவர்கள், கதீஜா (ரலி) அவர்களைத் திருமணம் செய்த பொழுது கதீஜா (ரலி) விதவையாக இருந்தார்களா?**

பதில்: ஆம்! கதீஜா நாயகி ஏற்கனவே இரண்டு முறைகள் திருமணம் செய்யப்பட்டு, கணவர்களை இழந்து விதவையாக இருந்தார்கள். அதன் பின்னரே நபி (ஸல்) அவர்களைத் திருமணம் செய்து கொண்டார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களை கதீஜா (ரலி) அவர்கள் திருமணம் செய்து கொள்ள என்ன காரணம்?**

பதில்: நபி (ஸல்) அவர்களிடம் இருந்த நேர்மை, நாணயம், உயரிய ஒழுக்கம், சிறந்த குண நலன்கள், மோசடி செய்யாமை போன்ற அரிய பண்புகளே கதீஜா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர் களைத் திருமணம் செய்து கொள்வதற்குரிய காரணங்களாகும்.

## குழந்தைப் பேறுகள்

**கேள்வி: அன்னை கதீஜா (ரலி) அவர்களுக்கு எத்தனை குழந்தைகள்? அவர்களில் ஆண்கள் எத்தனை பேர்? பெண்கள் எத்தனை பேர்?**

பதில்: கதீஜா (ரலி) அவர்களுக்கு ஆறு குழந்தைகள் பிறந்தன. அவர்களுள் நான்கு பெண் குழந்தைகள். இந்நால்வரும் இஸ்லாமிய காலத்திலேயே வாழ்ந்தனர். மக்காவிலிருந்து மதீனாவுக்கு 'ஹிஜ்ரத்' செய்தார்கள்.

ஆண் குழந்தைகள் காஸிம், அப்துல்லாஹ் என இருவர் ஆவார்கள். பெண் மக்கள் ஜைனப், ருகைய்யா, உம்மு குல்ஸும், ஃபாத்திமா ஆகியோர் ஆவார்கள்.

ஹஸ்ரத் காஸிம்: இவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு நபிப்பட்டம். அருளப்படுவதற்கு முன் பிறந்தார்கள். நபிப்பட்டம் அருளப்படு வதற்கு முன்னரே இரண்டு வயதுக் குழந்தையாக இருந்த நிலையிலேயே இறந்து போனார்கள்.

ஹஸ்ரத் அப்துல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அருளப்பட்ட பிறகு பிறந்து குழந்தைப் பருவத்திலேயே இறந்து

போனார்கள். இவர்களுக்கு 'தய்யிப்' என்றும் 'தாஹிர்' என்றும் சிறப்புப் பெயர்கள் இருந்தன.

**கேள்வி: ஹஸ்ரத் ஜைனப் (ரலி) அவர்களை யாருக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டது?**

பதில்: இவர்களை ரஸூல் (ஸல்) அவர்களின் சிறிய தாயாரின் மகன் அபுல் ஆஸ் (ரலி) அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டது. அபுல்ஆஸ் அவர்கள் இஸ்லாத்திற்கு வருவதற்கு முன்னரே ஜைனப் (ரலி) அவர்களை மணந்து கொண்டார்கள்.

இவ்வாறு மணந்து கொண்டது ஷரீஅத்துக்கு மாற்றமாக இருந்ததால் நபி (ஸல்) அவர்கள் இருவரையும் பிரித்து வைத்திருந்து, அபுல்ஆஸ் அவர்கள் தீனுல் இஸ்லாத்தில் இணைந்த பின் அவ்விருவரின் திருமணத்தைப் புதுப்பித்தார்கள்.

**கேள்வி: ஜைனப் (ரலி) அவர்களுக்குக் குழந்தைகள் எத்தனை?**

பதில்: ஜைனப் (ரலி) அவர்களுக்கு உமாமா, அலீ என்னும் பெயர் கொண்ட இரு ஆண் மக்கள் இருந்தனர்.

**கேள்வி: இவ்விரு பிள்ளைகளும் எவ்வளவு காலம் வாழ்ந்தனர்?**

பதில்: அலீ என்பவர் குழந்தையிலேயே இறந்து போனார். உமாமா சில ஆண்டுகள் வாழ்ந்து இறந்து போனார்.

**கேள்வி: ஜைனப் (ரலி) எப்பொழுது மரணமானார்கள்?**

பதில்: இவர்கள் தம் கணவர் அபுல்ஆஸ் (ரலி) அவர்களுடன் உஹதுப் போருக்கு வந்திருந்தார்கள். அச்சமயம் இவர்கள் கருவுற்றிருந்தார்கள். அபுல் ஆஸ் அவர்கள், இவர்களை ஓர் ஒட்டகத்தின் மீது அமர்த்தி ஜைது இப்னு ஹாரிதா என்பவரையும், ஓர் அன்ஸாரியையும் இவர்களுடன் துணைக்கு அனுப்பி மதீனாவிற்குக் கொண்டு செல்லுமாறு அனுப்பி வைத்தார்கள். இவர்களை வழியில் குரைஷிகள் சூழ்ந்து கொண்டனர். குரைஷிகளில் இருந்த ஹப்பார் இப்னு அஸ்வத் என்னும் கொடியவன் தன் கையில் வைத்திருந்த

**கேள்வி: எத்தனையாம் வயதில் ஃபாத்திமா (ரலி) அவர்களுக்குத் திருமணம் நடந்தது?**

பதில்: அவர்களின் பதினைந்தாம் வயதில் நடந்தது.

**கேள்வி: இவர்களுக்கு எத்தனை குழந்தைகள்?**

பதில்: இமாம்கள் ஹஸன், ஹுஸைன், முஹ்ஸின் (ரலியல்லாஹு அன்ஹும்) ஆகிய மூன்று ஆண் மக்களும், ருகைய்யா, உம்மு குல் ஸூம் என்னும் பெயர் கொண்ட இரு பெண் மக்களும் ஆவார்கள்.

ருகைய்யா என்னும் பெண் குழந்தை, குழந்தையாக இருந்தபோதே இறந்து விட்டது. உம்மு குல்ஸூம் அவர்களை ஹஸ்ரத் உமர் (ரலி) அவர்கள் மணந்து கொண்டார்கள்.

**கேள்வி: இவர்கள் எத்தனை வருடங்கள் வாழ்ந்தார்கள்?**

பதில்: 59 வருடங்கள் வாழ்ந்தார்கள்.

**கேள்வி: இவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு முன் இறந்தார்களா? அவர்களுக்குப் பின் இறந்தார்களா?**

பதில்: நபி (ஸல்) அவர்களின் மறைவிற்குப் பிறகு, ஹிஜ்ரி பதினொன்று, பிறை 3-ல் காலமானார்கள்.

**கேள்வி: அன்னை ஃபாத்திமா (ரலி) அவர்கள் எங்கே அடக்கப்பட்டார்கள்?**

பதில்: இரவு நேரத்தில் மதீனா நகரில் ஜன்னத் துல்பகீஃ என்னும் கப்ருஸ்தானில் அடக்கம் செய்யப்பட்டார்கள். ஹஸ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் ஜனாஸாத் தொழ வைத்தார்கள்.

முதன்முதலாக இவர்களின் ஜனாஸாவுக்குத்தான் போர்வை போர்த்தப்பட்டது. அந்த அளவிற்கு நாணமுள்ளவர்களாகவும், அந்நிய ஆடவர்களின் பார்வைதம் மீது படாதவாறும் காத்துக் கொண்டார்கள்.

# அன்னை கதீஜா (ரலி) அவர்களின் குணநலன்கள்

உலகப் பெண்களில் சிறப்பும், முழுமையும் பெற்றவர்கள் நான்கு பேர் ஆவார்கள். அவர்கள்: (1) ஹல்ரத் மர்யம் (அலை), (2) பிர்அவ்னின் மனைவி ஹல்ரத் ஆஸியா, (3) அன்னை கதீஜா (ரலி), (4) அன்னை ஃபாத்திமா (ரலி) ஆகியோர் ஆவர்.

ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வருகை தந்து, "அல்லாஹ்வின் தூதரே! இதோ அன்னை கதீஜா (ரலி) அவர்கள் தங்களிடம் ஒரு பாத்திரத்தில் உணவு கொண்டு வருகிறார்கள்.

"அவர்களுக்கு ரப்பாகிய அல்லாஹ்வுடையவும், என்னுடையவும் ஸலாமைக் கூறுங்கள். சுவர்க்கத்தில் முத்தால் ஆன ஒரு மாளிகை உண்டு. எனவே, எத்தகைய சப்தமோ, வீண் தொல்லையோ இராது என்னும் நற்செய்தியை அவர்களுக்குக் கூறுங்கள்" என்றனர்.

*(புஹாரீ, பாகம் 1, பக்கம் 539)*

நபி (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) அவர்களைப் பற்றி இவ்வாறு கூறுவார்கள். "வீட்டில் எஜமானியாகவும், குழந்தைகளின் தாயாகவும் கதீஜா இருந்தார்"

ஏழைகள், அநாதைகள், விதவைகளை அன்புடன் நடத்துவார்கள். தம் பொருட்களைத் துன்பப்படுவோர்களுக்கு அள்ளிக் கொடுப்பார்கள். எவரேனும் இஸ்லாத்தில் சேர்ந்து விட்டால், அவருக்குப் பகைவர்கள் பல வகையிலும் துன்பங்களை இழைத்து வருவார்கள். உணவு கொடுக்க மாட்டார்கள். வீட்டை விட்டும் துரத்தி விடுவார்கள். மனைவியைப் பிரித்து விடுவார்கள்.

இவை போன்ற இக்கட்டான நிலைகளில், அன்னை கதீஜா (ரலி) அவர்கள் பொன்னும் பொருளும் கொடுத்து, அவர்களை ஆதரிப்பார்கள்.

வீட்டை விட்டும் துரத்தப்பட்டவர்களைத் தம் வீட்டில் இருக்கச் செய்து அடைக்கலம் அளிப்பார்கள்.

சில நேரங்களில் இஸ்லாமியப் பகைவர்கள் நபி (ஸல்) அவர்களுக்குத் தீங்கிழைத்து விடுவார்கள். பகைவர்கள் செய்த கொடுமைகளைப் பற்றி அன்னை கதீஜா (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் முறையிடுவார்கள்.

அச்சமயம் கதீஜா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் வருந்த வேண்டாம். இதற்கு முன்னர் உலகில் தோன்றிய பல நபிமார்களுக்கும், இதேபோன்று தான் பகைவர்கள் துன்பங்கள் இழைத்து வந்தார்கள்" என்றெல்லாம் ஆறுதல் மொழி கூறி அண்ணலாரைத் தேற்றுவார்கள்.

இவ்வாறு கணவரின் அன்பிற்குரியவராகவும், குழந்தைகளுக்குச் சிறந்த தாயாகவும், இஸ்லாத்தின் வளர்ச்சிக்குத் தம் பொருட்களைத் தியாகம் செய்யக் கூடியவராகவும் அன்னை கதீஜா (ரலி) அவர்கள் வாழ்க்கை அமைந்திருந்தது.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்கள் எப்பொழுது மரணமானார்கள்?**

பதில்: ஹிஜ்ரத் செய்வதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் 65-ம் வயதில் இம்மை வாழ்வை முடித்துக் கொண்டார்கள். அவர்களை மக்காவிலுள்ள ஜன்னத்துல் முஅல்லாவில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

# 2. அன்னை ஆயிஷா (ரலி)

**கேள்வி: அன்னை கதீஜா (ரலி) அவர்கள் உயிர் வாழ்ந்தபோது நபி (ஸல்) அவர்கள் வேறு திருமணம் செய்து கொண்டார்களா?**

பதில்: இல்லவே இல்லை! அதுபோன்றே ஹஸ்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்கள் மரணமாகும் வரை ஹஸ்ரத் அலீ (ரலி) அவர்கள் வேறு எந்தப் பெண்ணையும் திருமணம் செய்து கொள்ளவில்லை.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களைத் திருமணம் செய்து கொண்டபோது அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் வயது என்ன?**

பதில்: இவர்கள் ஹல்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களின் மகள் ஆவார்கள். இவர்களுக்கு ஏழு வயது ஆகியிருந்த பொழுது திரு மக்காவில் நபி (ஸல்) அவர்களை மணந்தார்கள்.

ஹிஜ்ரத்துச் செய்த எட்டாம் மாதத்தில் அதாவது ஆயிஷா (ரலி) அவர்களுக்கு ஒன்பது வயது நிரப்பமான பொழுது தான், நபி (ஸல்) அவர்களின் வீட்டிற்கு வந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள், "ஒரு மலக்கு வெண்பட்டுத் துணியில் மறைந்து, உன் உருவத்தை என்னிடம் கொண்டு வந்து, 'இது தங்களுடைய மனைவி' என்று என்னிடம் கூறினார். நான் துணியை நீக்கி முகத்தைப் பார்த்தேன். அது முற்றிலும் உன் முகமாகவே இருந்தது.

"நான் இதனைப் பார்த்து விட்டு, இது இறைவன் சார்பாக இருந்தால், அதற்குரியதை அவனே நிறைவேற்றுவான் என்று கூறினேன். இவ்வாறு மூன்று இரவுகள் தொடர்ந்து கனவில் கண்டேன்" என்று அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் கூறியதாக ஹதீஸில் வந்துள்ளது.

**கேள்வி: அன்னை ஆயிஷா (ரலி) எத்தனையாம் வயதில் இறந்தார்கள்?**

பதில்: முஆவியா (ரலி) அவர்களின் கிலாபத்துடைய இறுதி நாட்களில், ஹிஜ்ரி 58–ம் வருடம் தம்முடைய 67–ம் வயதில் திருமதீனாவில் காலமானார்கள்.

**கேள்வி: அக்காலத்தில் திரு மதீனாவில் கவர்னராக இருந்தவர் யார்?**

பதில்: மர்வானுப்னுல் ஹக்கம் என்பவர் கவர்னராக இருந்தார். அவர் திரு மக்காவுக்கு உம்ரா செய்வதற்குச் சென்றபோது, அபூஹுரைரா (ரலி) அவர்களைத் தமக்குப் பதிலாக மதீனாவின் ஆளுனராக நியமித்து விட்டுச் சென்றனர்.

அச்சமயம் ஆயிஷா (ரலி) அவர்கள் இறந்து போனதால் ஆயிஷா (ரலி) அவர்களின் ஜனாஸாவை ஹஸ்ரத் அபூஹுரைரா (ரலி) தொழ வைத்தார்கள். பின்னர் அன்னை ஆயிஷா ஜன்னத்துல் பகீஃயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

**கேள்வி: அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் சிறப்புகள் என்ன?**

பதில்: இவர்கள் ஆழமான கடலைப் போன்று இல்மு – கல்வியைப் பெற்றிருந்தார்கள். மேலும் இவர்கள் 2210 நபி மொழிகளாகிய ஹதீஸ்களை அறிவித்துள்ளார்கள்.

மேலும், இவர்கள் மிகவும் நினைவாற்றல் உள்ளவர்களாகவும், நுண்ணறிவும், ஆராய்ச்சித் திறனும் பெற்றவர்களாகவும், இஸ்லாத்துக்கு முந்தைய அரபுக் கவிதைகள் பலவற்றை மனனம் செய்தவராகவும் இருந்தனர். மேலும் ஹதீஸிலும், இஸ்லாமியச் சட்டக் கலையிலும் இவர்கள் விரிந்த ஞானம் பெற்றிருந்தார்கள்.

**கேள்வி: இவர்களுக்குக் குழந்தைகள் உண்டா?**

பதில்: இல்லை.

# அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் கொடைத்தன்மை

**கேள்வி: அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் கொடைத்தன்மை எத்தகையது?**

விடை: ஒரு முறை அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள், ஓர் இடத்திற்குப் பயணம் செய்து விட்டுத் திரும்பிவரும் பொழுது, ஓர் இடத்தில் தங்கினார்கள். அச்சமயம் அவர்கள் தங்கியிருந்த கூடாரத்தின் வாயிலில் ஓர் ஏழை யாசகம் கேட்டார்.

அன்னை அவர்கள் ஒரு ரொட்டித் துண்டை அந்த ஏழைக்குக் கொடுத்தார்கள். அதன் பின்னர் இன்னொரு மனிதர் குதிரையில் அமர்ந்தவராகத் தமக்குப் பசிக்கிறது என்று கூறினார்.

பணியாளை அழைத்து, குதிரையில் இருப்பவரை ஓர் இடத்தில் அமர வைத்து அவருக்கு வயிறு நிரம்ப உணவு கொடுத்து அனுப்புமாறு ஏவினார்கள்.

இதைக் கண்ட மக்கள், "அன்னையே! யாருக்கு அதிகமான உதவி செய்ய வேண்டியிருந்ததோ தாங்கள் அவருக்கு ஒரே ஒரு ரொட்டித் துண்டைக் கொடுத்து அனுப்பி விட்டீர்கள்.

"ஆனால், இப்பொழுது குதிரையின் மீது அமர்ந்து வந்து யாசகம் கேட்டவருக்கு வயிறு நிரம்ப உணவு கொடுக்குமாறு பணித்தீர்களே, என்ன காரணம்? என்று கேட்டனர்.

அதற்கு அன்னை அவர்கள், "அந்த ஏழை ஒரு ரொட்டியைக் கொண்டு மகிழ்ச்சியடைந்தார், இவரோ அவ்வாறு திருப்தி கொள்ளமாட்டார். ஒவ்வொரு மனிதனின் தரத்துக்குத் தக்கவாறு மதித்து நடக்க வேண்டும்.

"எல்லாம் வல்ல அல்லாஹ்கூட எல்லோருக்கும் ஒரே விதமாக சமத்துவம் அளிக்கவில்லை" என்று சமாதானம் கூறினார்கள்.

இன்னும் கேளுங்கள்! அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அணிந்திருந்த ஆடையில் பல ஒட்டுக்கள் போடப்பட்டிருந்தன. அந்நிலையிலும் அவர்களுக்கு வழங்கப்பட்ட ஐம்பதினாயிரம் திர்ஹம்களையும் அல்லாஹ்வின் பாதையில், அவனின் திருப்தியை எதிர்பார்த்து அவற்றை ஏழை எளியவர்களுக்கு அவர்கள் ஸதகாச் செய்து விட்டார்கள்.

உலகத்தின் ஆசாபாசத்தில், அதன் ஏமாற்று வலையில் சிக்கிக் கொண்டவர்கள், பணத்தைச் சேர்ப்பதிலேயே குறியாகத் தங்கள் மறுமை வாழ்க்கையையும் மறந்து வாழ்ந்து வருகின்றனர். என்னே இவர்களின் அறியாமை!

இன்னொரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள். உண்பதற்கு ஒரு ரொட்டித் துண்டைத் தவிர வேறு எதுவுமில்லை. அச்சமயம் ஒரு பிச்சைக்காரர் குரல் கொடுத்தார். அன்னையார் அவர்கள் பணிப் பெண்ணை

அழைத்து, 'அந்த ரொட்டியை அந்த யாசகருக்குக் கொடுத்து விடு' என்றார்கள்.

'மாலையில் எதைக் கொண்டு நோன்பு திறப்பீர்கள்' என்று பணிப் பெண் கேட்டார். 'அந்த ரொட்டியை அவருக்குக் கொடுத்து விடு' என்று கோபமாகக் கூறினார்கள். மாலை நேரம் வந்ததும், ஓர் இடத்திலிருந்து ஆட்டு இறைச்சி வந்தது. அச்சமயம், "அல்லாஹ் ரொட்டியை விட உயர்ந்த பொருளைக் கொடுத்துவிட்டான்" என்றார் பணிப்பெண்.

என்னே அன்னையாரின் தவக்கல் – இறை நம்பிக்கை!

எவருக்கு அல்லாஹ்வின் மீது தவக்கல் இருக்குமோ, அவரைத் தேடி எல்லாம் வரும். எவரிடம் இறை நம்பிக்கை இருக்காதோ, அவரை விட்டு எல்லாம் போய் விடும்.

# 3. அன்னை ஹஃப்ஸா (ரலி)

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் மூன்றாம் மனைவி யார்?**

பதில்: நபி (ஸல்) அவர்களின் மூன்றாம் மனைவி அன்னை ஹஃப்ஸா ஆவார்கள். இவர்கள் அமீருல் முஃமீனின் ஹஸ்ரத் உமர் (ரலி) அவர்களின் திருமகளாவார்கள்.

**கேள்வி: அன்னை ஹஃப்ஸா (ரலி) எத்தனையாம் வயதில் நபி (ஸல்) அவர்களைத் திருமணம் செய்து கொண்டார்கள்?**

பதில்: தங்களுடைய 22–ம் வயதில் நபி (ஸல்) அவர்களைத் திருமணம் செய்து கொண்டார்கள்.

**கேள்வி: இவர்கள் எப்பொழுது? எங்கு மரண மானார்கள்?**

பதில்: இவர்கள் தங்களுடைய 59–ம் வயதில் ஹிஜ்ரீ 45–ம் வருடம் திரு மதீனாவில் வஃபாத்தானார்கள். மதீனாவின் கவர்னராக இருந்த மர்வானுப்னுல் ஹக்கம் ஜனாஸாவைத் தொழ வைத்து அவர்களின் ஜனாஸாப் பெட்டியையும் சுமந்தார். அத்துடன் ஹஸ்ரத் அபூஹுரைரா (ரலி) அவர்களும் ஜனாஸாப் பெட்டியைச் சுமந்தார்கள்.

**கேள்வி: அன்னை ஹஃப்ஸா (நபி) அவர்களின் சிறப்புகள் என்ன?**

பதில்: அன்னை ஹஃப்ஸா (ரலி) அவர்கள், அண்ணல் (நபி) அவர்களின் மனைவியாக மட்டும் இல்லாமல், குர்ஆன் ஹாபி ளாகவும், ஓதுவதிலும், எழுதுவதிலும் திறமை வாய்ந்தவர்களாகவும் இருந்து வந்தனர்.

மேலும், அன்னையார் அவர்கள், பகல் காலங்களில் நோன்பு நோற்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். இவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையிலேயே வஃபாத் ஆனார்கள்.

அன்னை ஹஃப்ஸா (ரலி) அவர்கள் அறுபது ஹதீஸ்கள் வரை அறிவிப்புச் செய்துள்ளார்கள்.

# 4. அன்னை உம்மு ஸல்மா (ரலி)

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் நான்காம் மனைவி யார்?**

பதில்: அன்னை உம்மு ஸல்மா (ரலி) அவர்களாகும்.

**கேள்வி: அன்னை உம்மு ஸல்மா (ரலி) அவர்களின் பிறப்பு, சிறப்புகள் யாவை?**

பதில்: அன்னை உம்மு ஸல்மா (ரலி) அவர்கள் விதவையாகவே இருந்து வந்தார்கள். ஆழிய கடலைப் போன்ற இரக்க குணம் கொண்டவர்கள். நபி (ஸல்) 'உம்முல் மஸாக்கீன் – ஏழைகளின் தாய்' என்ற பட்டத்தையும் இவர்களுக்கு அளித்திருந்தார்கள்.

**கேள்வி: இவர்களின் இயற்பெயர் என்ன?**

பதில்: இவர்களின் இயற்பெயர் 'ஹிந்த்' என்பதாகும்.

**கேள்வி: இவர்கள் முதலில் யாரைத் திருமணம் செய்திருந்தார்கள்?**

பதில்: இவர்கள் நபி (ஸல்) அவர்களின் மாமியான பர்ரா என்பவரின் மகள் அபூ ஸல்மா (ரலி) என்பவரை மணந்திருந்தார்கள்.

இந்த அபூ ஸல்மா (ரலி) என்பவர்கள் நபி (ஸல்) அவர்களை ஈமான் கொண்டவர்களில் பன்னிரண்டாவது மனிதர் ஆவார்கள்.

நபி (ஸல்) அவர்களும் அபூஸல்மா (ரலி) அவர்களும் ஒரே பெண்ணிடம் பால் குடித்த சகோதரர்கள் ஆவார்கள்.

இந்த அபூ ஸல்மா (ரலி) அவர்களும், அன்னை உம்மு ஸல்மா (ரலி) அவர்களும், அபீஸினியா நாட்டுக்கு ஹிஜ்ரத்துச் செய்து, அங்கு சில காலம் இருந்த பிறகு, மீண்டும் மக்க மாநகரம் வந்து, மதீனாவுக்கு ஹிஜ்ரத்துச் செய்தார்கள். இவ்விருவரும் திரு மக்காவை விட்டும் புறப்பட்டபொழுது, இவர்களின் உறவினர்கள் அபூ ஸல்மா (ரலி) அவர்களை நோக்கி,

“உம்முடைய குழந்தைகள், எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; எனவே நீர் அவர்களை எங்களிடம் விட்டுச் செல்வீராக” என்று கூறி, குழந்தைகளைப் பறித்துக் கொண்டார்கள்.

உம்மு ஸல்மா (ரலி) அவர்களின் உறவினர்கள், “எங்கள் குடும்பத்துப் பெண்ணை நாங்கள் விட மாட்டோம்” என்று கூறி உம்மு ஸல்மா (ரலி)வைத் தங்களுடன் தங்க வைத்துக் கொண்டனர். பின்னர் அபூஸல்மா (ரலி) அவர்கள் மனைவியையும், மக்களையும் பிரிந்து திரு மதீனா வந்து விட்டனர்.

**கேள்வி: அபூ ஸல்மா (ரலி) அவர்கள் நிலை என்ன ஆனது?**

பதில்: பத்ரு, உஹதுப் போர்களில் கலந்து கொண்டனர். உஹதுப் போரில் ஏற்பட்ட காயத்தால் ஷஹீத் ஆனார்கள்.

**கேள்வி: உம்மு ஸல்மா (ரலி) அவர்களின் முதல் கணவருக்குப் பிறந்த குழந்தைகள் எத்தனை பேர்கள்?**

பதில்: இரண்டு ஆண், இரண்டு பெண் மக்கள் இருந்தனர்.

**கேள்வி: உம்மு ஸல்மா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களை எப்படித் திருமணம் செய்து கொண்டனர்?**

பதில்: இதோ! அன்னையார் கூறுகிறார்கள், கேளுங்கள்: “என்னுடைய இத்தா கழிந்தவுடன், அபூபக்கர் (ரலி) அவர்கள் என்னை மணம் முடித்துக் கொள்வதாக என்னிடம் தூது அனுப்பினார்கள். எனினும் நான் அவர்களை மணமுடித்துக் கொள்ள (ஒப்ப)வில்லை.

“பின்னர் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், உமர் (ரலி) அவர்கள் மூலமாக என்னை மணம் செய்து கொள்வதாகத் தூது அனுப்பினார்கள்.

“அதற்கு நான், “நிச்சயமாக நான் ஓர் உரோஷமுள்ள பெண், அன்றியும் பிள்ளைக் குட்டிக்காரி. என் உறவினர்களும் இங்கு இல்லை!” என்று கூறினேன். எனவே அவர்கள், இச்செய்தியை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடம், “நீர் அவர்களிடம் சென்று மீண்டும் அவரை நோக்கி, ‘உம்முடைய உரோஷத்தன்மையைப் பற்றி நான் இறைவனிடம் இறைஞ்சி (துஆச் செய்து) அதனை உம்மை விட்டும் அகன்றொழியச் செய்து விடுகிறேன்.

“ஆனால் உம்முடைய சிறு குழந்தைகளைப் பற்றி நீரே அவர்களுக்குப் போதுமானவராக இருக்கின்றீர். அன்றி, உம் காரியஸ்தர்களில் இங்கு இருப்பவர்களும் சரி, இங்கு இல்லாதவர்களும் சரி, இதைப் பற்றி அதிருப்தியுறுபவர் எவருமிலர்’ என்று (நான் கூறியதாகக்) கூறும்” என்றனர்.

“நான் என் மகனை நோக்கி, “உமரே! எழும், அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும், எனக்கும் மணம் முடித்துவையும்!” என்று கூறினேன். எனவே, அவர், அவர்களுக்கு (என்னை) மணம் முடித்து வைத்தார்”

*அறிவிப்பவர்: உம்மு ஸல்மா (ரலி)*

*நூல்: நஸாயீ*

**கேள்வி: நபி (ஸல்) அவர்களை மணந்து கொண்ட பொழுது உம்மு ஸல்மா (ரலி) அவர்களின் வயது எவ்வளவு?**

பதில்: அப்பொழுது அன்னையாரின் வயது 24.

**கேள்வி: அன்னை அவர்கள் எத்தனையாம் வயதில் இறந்தனர்?**

பதில்: அன்னை உம்மு ஸல்மா (ரலி) அவர்கள், ஹிஜ்ரி 60–ம் வருடம் தங்களின் 80–ம் வயதில் காலமானார்கள்.

அன்னையார் மார்க்க அறிவில் கடல் போன்ற ஞானம் பெற்றிருந்தார்கள். ஏழைகளின் மீது மிகவும் இரக்கம் கொண்டவர்கள்.

ஒரு முறை சில ஏழைகள் வாயிலில் வந்து நின்று வற்புறுத்திப் பிச்சைக் கேட்டனர். பெண்களும் இக்கூட்டத்தில் இருந்தனர். இவ்வாறு கட்டாயப்படுத்தி யாசகம் கேட்கவும், அன்னை ஃபாத்திமா (ரலி) சிறிது கோபம் கொண்டனர். அன்னை உம்மு ஸல்மா (ரலி) அவர்கள், "அவர்களைக் கோபித்துக் கொள்ள நமக்கு எத்தகைய உரிமையும் இல்லை!" என்று கூறிவிட்டு பணியாட்களிடம், "பேரீத்தம் பழத் துண்டில் ஒன்றையேனும் அவர்களிடம் கொடுத்தனுப்புங்கள்" என்றார்கள்.

# 5. அன்னை உம்மு ஹபீபா (ரலி)

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் ஐந்தாம் மனைவி யார்?**

பதில்: அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்களாவர்.

**கேள்வி: அன்னையாரின் இயற்பெயர் என்ன?**

பதில்: ரமலா என்பது இவர்களின் இயற்பெயராகும்.

**கேள்வி: இவர்களின் தந்தையின் பெயர் என்ன?**

பதில்: அபூஸுஃப்யானுப்னு ஹர்ப் (ரலி) என்பதாகும்.

**கேள்வி: இவர்களின் தாயார் பெயர் என்ன?**

பதில்: ஸபிய்யா பின்த் அபுல் ஆஸ் என்பதாகும்.

**கேள்வி: அன்னையார் அவர்கள் எப்பொழுது பிறந்தார்கள்?**

பதில்: நபி (ஸல்) அவர்களுக்கு நபிப் பட்டம் கிடைப்பதற்குப் பதினேழு ஆண்டுகளுக்கு முன் பிறந்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களை அன்னையார் எப்படி மணந்தார்கள்?**

பதில்: இதோ! அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் வாய் மூலமே கேட்போம்:

"நான் உபைதுல்லாஹ் இப்னு அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் அவர்களின் மனைவியாக இருந்தேன். அவர் அபீஸீனியாவில் இறந்து விட்டார். பின்னர் என்னை அபீஸீனிய அரசர் நஜ்ஜாஷி அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு நாலாயிரம் திர்ஹங்கள் வைத்து (அதனைத் தாமே எனக்குத் தந்து) மணமுடித்துக் கொடுத்து ஷுரஹ்பீல் இப்னு ஹஸன் என்பவரோடு, என்னை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களும் (என்னைத் தங்களின் மனைவியாக) ஏற்றுக் கொண்டனர்.

*அறிவிப்பவர்: உம்மு ஹபீபா (ரலி), நூல்: நஸாயீ*

**கேள்வி: திருமணத்தின் பொழுது இவர்களின் வயது எத்தனை?**

பதில்: திருமணத்தின் போது அன்னையின் வயது 36.

**கேள்வி: அன்னையார் எத்தனையாம் வயதில் இறந்தார்கள்?**

பதில்: தங்களின் 72–ம் வயதில் ஹிஜ்ரி 44–ம் வருடம் திரு மதீனாவில் காலமானார்கள்.

**கேள்வி: இவர்களின் சிறப்புக் குணங்கள் யாவை?**

பதில்: அன்னை அவர்கள் ஈமானில் உறுதி மிக்கவர்களாகவும், இக்லாஸ் என்னும் தூய்மை எண்ணம் கொண்டவர்களாகவும், தீரமிக்கவர்களாகவும் இருந்தனர்.

ஒரு முறை அன்னை அவர்களின் தந்தை அபூஸுப்யான் இஸ்லாத்தில் இணைவதற்கு முன் மதீனாவுக்கு வந்திருந்தார். தம் மகள் உம்மு ஹபீபா (ரலி) அவர்களைக் காண வேண்டும் என்ற ஆசையினால் அவர்கள் வீட்டிற்குச் சென்றார்.

அங்கு நபி (ஸல்) அவர்கள் அமர்வதற்காக விரிக்கப்பட்டிருந்த போர்வையில் அவர் அமர்ந்தார். உடனே உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் தம் தந்தை அமர்வதற்கு முன் வெடுக்கென்று அவ்விரிப்பைச் சுருட்டி எடுத்து விட்டார்கள்.

மகளின் இச்செயல் கண்டு கடுஞ்சினம் கொண்டவராக, "உன்னிட முள்ள விரிப்பு உன் தந்தையை விட உயர்வானதா?" என்று கேட்டார்.

"இது அல்லாஹ்வின் தூதர், நபி (ஸல்) அவர்கள் அமர்வதற் கென்றே உரிய விரிப்பாகும். அதில் உம்மைப் போன்ற ஒரு 'முஷ்ரிக்' அமர்வதற்குத் தகுதியில்லை" என்றனர்.

இதைக் கேட்ட அபூஸுஃப்யான் 'நீ என்னை விட்டுப் பிரிந்தபின் மிகவும் மாற்றம் அடைந்து விட்டாய்' என்று கூறி மவுனமாகி விட்டார்.

மேலும், அன்னை அவர்கள் நபில் வணக்கங்களை அதிகம் தொழுபவர்களாக இருந்து வந்தனர்.

# 6. அன்னை ஸவ்தா (ரலி)

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் அன்னை ஸவ்தா (ரலி) அவர்களை எப்பொழுது திருமணம் செய்து கொண்டார்கள்?**

பதில்: நபி (ஸல்) அவர்கள் இவர்களை, ஹிஜ்ரத்துக்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் திருமணம் செய்து கொண்டார்கள்.

**கேள்வி: இவர்கள் யாருடைய மகளார்?**

பதில்: இவர்கள் ஜும்ஆ என்பவரின் மகளாவார்கள். மேலும், நபி (ஸல்) அவர்களின் முப்பாட்டனாரான ஹாஷிம் அவர்களின் மனைவி ஸல்மானின் சகோதரர் கைஸ் என்பவரின் மகளாவார்.

**கேள்வி: அன்னை ஸவ்தா (ரலி) அவர்கள் ஏற்கெனவே திருமணம் ஆனவரா?**

பதில்: ஆம்! ஸக்ரான் இப்னு அம்ர் என்பவரை முதலில் திருமணம் செய்திருந்தார்கள். இவர்கள் தம் கணவர் ஸக்ரான் (ரலி) அவர்களுடன் அபீஸீனியா நாட்டுக்கு ஹிஜ்ரத் சென்றார்கள். சென்ற இடத்தில் கணவர் இறந்து விட்டதால் உம்முல் முஃமினீன் கதீஜா (ரலி) அவர்களின் மரணத்துக்குப் பின் நபி (ஸல்) அவர்கள் இவர்களைத் திரு மக்காவில் திருமணம் செய்து கொண்டனர்.

**கேள்வி: திருமணத்தின் போது ஸவ்தா (ரலி)யின் வயது எவ்வளவு?**

பதில்: அன்னையாரின் வயது ஐம்பது.

**கேள்வி: இவர்கள் எந்த ஆண்டு மரணமானார்கள்?**

பதில்: இவர்கள் ஹிஜ்ரி 19–ம் வருடம், திரு மதீனாவில், தங்களின் 72–ம் வயதில் காலமானார்கள்.

**கேள்வி: அன்னை ஸவ்தா (ரலி) அவர்களின் குண இயல்புகள், வணக்க வழிபாடுகள் யாவை?**

பதில்: அன்னை ஸவ்தா (ரலி) அவர்கள் நகைச்சுவையாகப் பேசக் வடியவர்களாகவும், மனத்துக்கு மகிழ்வை அளிக்கும் முறையில் பேசுபவர்களாகவும் இருந்தனர்.

ஒரு முறை, "சென்ற இரவு நான் தங்களுடன் தொழுது கொண்டிருந்தேன் அல்லவா? அச்சமயம் தாங்கள் 'ருகூஃ'வில் குனிந்து கொண்டிருந்தீர்கள். நீண்ட நேரம் ஆகியும் தாங்கள் நிமிரவே இல்லை. அதனால் என் முதுகு எலும்பு எங்கே முறிந்து விடுமோ என்று எண்ணினேன். எனவே என்னுடைய மூக்கைப் பிடித்துக் கொண்டே ருகூஃவில் இருந்தேன்" என்று நபி (ஸல்) அவர்களிடம் அன்னை ஸவ்தா (ரலி) அவர்கள் கூறியதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் நீண்ட நேரம் புன்முறுவல் பூத்தவர்களாக இருந்தனர்.

**கேள்வி: அன்னை ஸவ்தா (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் மூலம் குழந்தைகள் உண்டா?**

பதில்: இல்லை, எனினும், ஸவ்தா (ரலி) அவர்களின் முதல் கணவரான ஸக்ரான் (ரலி) அவர்கள் மூலம் ஓர் ஆண் குழந்தை இருந்தது. இவரின் பெயர் அப்துர் ரஹ்மான் என்பதாகும். இவர் ஈரானில் நடந்த 'ஜலூலா' என்னும் போரில் முஸ்லிம் வீரராய் கலந்து கொண்டு வீர சுவர்க்கம் அடைந்தார்.

**கேள்வி: ஸவ்தா (ரலி) அவர்களைப் பற்றி அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியது என்ன?**

பதில்: "எந்தப் பெண்ணைப் பார்த்தாலும், அவளைப் போன்று நானும் இருக்க வேண்டும் என்ற பேராசை எனக்கு ஒரு போதும் ஏற்பட்டதில்லை. ஆனால் ஸவ்தா (ரலி) அவர்களின் பேரழகையும், நடத்தையையும், நற்குணங்களையும் கண்டபின், நானும் ஸவ்தாவைப் போல் இருக்க வேண்டும்! என்று ஆசைப்பட்டேன்" என்று கூறினார்கள்.

# 7. அன்னை ஜைனப் (ரலி)

**கேள்வி: அன்னை ஜைனப் (ரலி) அவர்கள் முதலில் யாரைத் திருமணம் செய்திருந்தார்கள்?**

பதில்: அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் என்பவரின் மனைவியாக இருந்தார்கள்.

**கேள்வி: இவர்கள் நபி (ஸல்) அவர்களை எப்பொழுது மணந்து கொண்டார்கள்?**

பதில்: அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் உஹதுப்போரில் வீர மரணம் அடைந்த பின் நபி (ஸல்) அவர்களை மணந்து கொண்டார்கள்.

**கேள்வி: இவர்கள் எத்தனை ஆண்டு காலம் வாழ்ந்தார்கள்?**

பதில்: இவர்கள் அன்னை கதீஜா (ரலி) அவர்களைப் போன்றே நபி (ஸல்) அவர்களின் முன்னிலையிலேயே காலமானார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அன்னை கதீஜா (ரலி) அன்னை ஜைனப் (ரலி) ஆகிய இருவருக்கும் மட்டுமே தாங்களே முன்னின்று மரணச் சடங்குகளைச் செய்து முடித்து, 'ஜன்னத்துல் பகீஃ' என்னும் கப்ருஸ்தானில் அடக்கம் செய்தார்கள்.

**கேள்வி: அச்சமயம் அன்னை ஜைனப் (ரலி) அவர்களின் வயது என்ன?**

பதில்: அச்சமயம் அன்னையாரின் வயது முப்பது

**கேள்வி: இவர்களுக்குரிய சிறப்புப் பெயர் என்ன?**

பதில்: 'உம்முல் மஸாக்கீன் – 'ஏழையர்களின் தாய்' என்பதாகும்.

## 8. அன்னை ஜைனப் பிந்த் ஜஹ்ஷ் (ரலி)

**கேள்வி: இந்த ஜைனப் பிந்த் ஜஹ்ஷ் என்பவர் யார்?**

பதில்: இவர்கள் நபி (ஸல்) அவர்களின் மாமி மகள் ஆவார்.

**கேள்வி: இவர்கள் எப்பொழுது இஸ்லாத்தில் சேர்ந்தனர்?**

பதில்: இவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு நபிப் பட்டம் கிடைத்த ஆரம்ப காலத்திலேயே இஸ்லாத்தில் சேர்ந்து விட்டார்கள்.

**கேள்வி: இவர்களின் முதல் திருமணம் யாருடன் நடந்தது?**

பதில்: நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனாராக இருந்த ஹஜ்ரத் ஜைத் இப்னு ஹாரிதாவுடன் திருமணம் நடந்தது.

**கேள்வி: அன்னை ஜைனப் (ரலி) அவர்கள் ஜைத் (ரலி) அவர்களுடன் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தனர்?**

பதில்: சுமார் ஓராண்டு காலம் வரை அன்னை ஜைனப் (ரலி) அவர்களும், ஜைத் (ரலி) அவர்களும் குடும்ப வாழ்க்கை நடத்தினார்கள்.

**கேள்வி: ஜைத் (ரலி) அவர்கள் ஜைனப் (ரலி) அவர்களை ஏன் மண விலக்கு (தலாக்) சொன்னார்கள்?**

பதில்: காரணம் என்னவென்றால் ஜைத் (ரலி) அவர்கள் அடிமையாக இருந்தவர்கள். இஸ்லாத்தில் அடிமையோ, விடுதலை பெற்றவரோ, குரைஷிக் குலமோ எவராயினும் அனைவரும் சமமே ஆவார்கள். எனவேதான் நபி (ஸல்) அவர்கள் தம் மாமி மகளான ஜைனப் (ரலி) அவர்களை ஜைத் (ரலி) அவர்களுக்கு மணமுடித்து வைத்தார்கள். ஜைத் (ரலி) அவர்கள் அடிமையாக இருந்து விடுதலை பெற்ற

வராகவும், அழகு குறைந்தவராகவும் இருந்ததைக் காரணமாக வைத்து ஜைத் (ரலி) அவர்களுடன் சரியாக வாழாமல் அவர்கள் வெறுப்படையும் சொற்களைக் கூறி வந்தார்கள் ஜைனப் (ரலி). இச்சொற்களைப் பொறுத்துக் கொள்ள முடியாத ஜைத் (ரலி) அவர் கள், நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டார்கள். அதன் பின்னரே இருவருக்கும் கசப்பு மேலோங்கித் தலாக் ஏற்பட்டு விட்டது.

**கேள்வி: இத்தா கழித்தபின் ஜைனப் பிந்து ஜஹ்ஷ் யாரை மணந்து கொண்டார்கள்?**

பதில்: இத்தா கழிந்த பின் நபி (ஸல்) அவர்களே ஜைனப் (ரலி) அவர்களை மணந்து கொண்டனர்.

**கேள்வி: அன்னை ஜைனப் (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் எப்பொழுது திருமணம் செய்து கொண்டனர்?**

பதில்: இது பற்றி ஹதீஸில் வந்துள்ளது. அது வருமாறு: "ஜைனப் (ரலி) அவர்களுடைய 'இத்தா' காலம் கழிந்த பின், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களை நோக்கி, "நீர் ஜைனப் (ரலி) அவர்களிடம் சென்று, 'நான் அவரை மணம் முடிக்க விரும்புவ தாகக் கூறும்" என்றார்கள். எனவே, அனஸ் (ரலி) அவர்கள் அவர்களிடம் சென்றபோது, அவர் மாவு பிசைந்து கொண்டிருந்தார். பின்னர் நிகழ்ந்தவற்றை அனஸ் (ரலி) அவர்களே விவரிக்கிறார்கள்; அவரை நான் கண்டதும் (அவர் இருந்த நிலை) என் மனத்திற்குப் பெரும் கவலையைத் தரவே, அவரைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் என்னால் முடியவில்லை. எனவே அவரை விட்டும் சற்றுத் திரும்பி, பின் சென்று நின்று 'ஜைனபே! அண்ணல் நபி (ஸல்) அவர்கள் (உம்மை) மணமுடிக்க விரும்புவதாக உம்மிடம் அறிவிக்குமாறு என்னை அனுப்பி வைத்தனர்' என்று கூறினேன்.

அதற்கு அவர், 'நான் யாதொன்றும் செய்வதற்கில்லை. என்னு டைய இறைவனிடமிருந்து அனுமதி வரும் வரை' என்று கூறித் தாம்

தொழும் இடத்திற்குச் சென்று தொழத் துவங்கி விட்டார். குர்ஆனில் சில வசனங்கள் அருளப்பட்டன. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வந்து அவரிடம் அனுமதி பெறாது உள்ளே நுழைந்து சென்றனர். பின்னர் அவர்கள் எங்களுக்குப் பகல்வரை ரொட்டியும் இறைச்சியும் உண்ண அளித்ததை நிச்சயமாக நான் கண்டேன்.

அப்பொழுது மக்களில் சிலர் (விருந்து) உண்டு விட்டுப் புறப்பட்டனர். மற்றும் சிலர் உணவருந்தி விட்ட பின்னும் (அவ்)வீட்டில் இருந்தவாறு உரையாடிக் கொண்டிருந்தார்கள். எனவே, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வெளியில் புறப்பட்டு விட்டனர். நானும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன். அப்பொழுது அவர்கள் தங்கள் மனைவியரின் வீடுகளுக்குச் சென்று அவர்களுக்கு 'ஸலாம்' கூறினார்கள்.

அச்சமயம் அவர்கள் (மனைவிகள்) நபி (ஸல்) அவர்களை நோக்கி, 'நாயகமே! தாங்கள் தங்களின் (புது) மனைவியை எவ்வாறு அடையப் பெற்றீர்கள்?' என்று கேட்டனர். பின்னர் மக்கள் ஜைனப் (ரலி) அவர்களின் வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டனர் என்ற செய்தியை, நானோ அல்லது வேறு எவரோ நபி (ஸல்) அவர்களுக்கு அறிவிக்கவே, அவர்கள் எழுந்து ஜைனப் (ரலி) அவர்களின் வீட்டிற்குள் சென்றனர். நானும் அவர்களுடன் நுழைந்தேன். அப்பொழுது அவர்கள் தங்களுக்கும் எனக்கும் இடையே ஒரு திரையிட்டனர். அதே நேரத்தில் திரை பற்றி இறைவனின் திருவசனம் இறங்கி அது பற்றி மக்களுக்கு எடுத்துரைக்கப்பட்டது.

*அறிவிப்பவர்: அனஸ் (ரலி),*

*நூல்: முஸ்லிம், நஸயீ*

**கேள்வி: அன்னை ஜைனப் (ரலி) அவர்கள் காரணமாக அல்லாஹ் அருளிய கட்டளை என்ன?**

பதில்: "ஈமான் கொண்டவர்களே! உணவிற்காக உங்களுக்கு அனுமதி அளிக்கப்படும் வரையில் அது தயார் ஆவதை

வராகவும், அழகு குறைந்தவராகவும் இருந்ததைக் காரணமாக வைத்து ஜைத் (ரலி) அவர்களுடன் சரியாக வாழாமல் அவர்கள் வெறுப்படையும் சொற்களைக் கூறி வந்தார்கள் ஜைனப் (ரலி). இச்சொற்களைப் பொறுத்துக் கொள்ள முடியாத ஜைத் (ரலி) அவர் கள், நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டார்கள். அதன் பின்னரே இருவருக்கும் கசப்பு மேலோங்கித் தலாக் ஏற்பட்டு விட்டது.

**கேள்வி: இத்தா கழித்தபின் ஜைனப் பிந்து ஜஹ்ஷ் யாரை மணந்து கொண்டார்கள்?**

பதில்: இத்தா கழிந்த பின் நபி (ஸல்) அவர்களே ஜைனப் (ரலி) அவர்களை மணந்து கொண்டனர்.

**கேள்வி: அன்னை ஜைனப் (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் எப்பொழுது திருமணம் செய்து கொண்டனர்?**

பதில்: இது பற்றி ஹதீஸில் வந்துள்ளது. அது வருமாறு: ''ஜைனப் (ரலி) அவர்களுடைய 'இத்தா' காலம் கழிந்த பின், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களை நோக்கி, ''நீர் ஜைனப் (ரலி) அவர்களிடம் சென்று, 'நான் அவரை மணம் முடிக்க விரும்புவ தாகக் கூறும்'' என்றார்கள். எனவே, அனஸ் (ரலி) அவர்கள் அவர்களிடம் சென்றபோது, அவர் மாவு பிசைந்து கொண்டிருந்தார். பின்னர் நிகழ்ந்தவற்றை அனஸ் (ரலி) அவர்களே விவரிக்கிறார்கள்; அவரை நான் கண்டதும் (அவர் இருந்த நிலை) என் மனத்திற்குப் பெரும் கவலையைத் தரவே, அவரைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் என்னால் முடியவில்லை. எனவே அவரை விட்டும் சற்றுத் திரும்பி, பின் சென்று நின்று 'ஜைனபே! அண்ணல் நபி (ஸல்) அவர்கள் (உம்மை) மணமுடிக்க விரும்புவதாக உம்மிடம் அறிவிக்குமாறு என்னை அனுப்பி வைத்தனர்' என்று கூறினேன்.

அதற்கு அவர், 'நான் யாதொன்றும் செய்வதற்கில்லை. என்னு டைய இறைவனிடமிருந்து அனுமதி வரும் வரை' என்று கூறித் தாம்

தொழும் இடத்திற்குச் சென்று தொழத் துவங்கி விட்டார். குர்ஆனில் சில வசனங்கள் அருளப்பட்டன. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வந்து அவரிடம் அனுமதி பெறாது உள்ளே நுழைந்து சென்றனர். பின்னர் அவர்கள் எங்களுக்குப் பகல்வரை ரொட்டியும் இறைச்சியும் உண்ண அளித்ததை நிச்சயமாக நான் கண்டேன்.

அப்பொழுது மக்களில் சிலர் (விருந்து) உண்டு விட்டுப் புறப்பட்டனர். மற்றும் சிலர் உணவருந்தி விட்ட பின்னும் (அவ்)வீட்டில் இருந்தவாறு உரையாடிக் கொண்டிருந்தார்கள். எனவே, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வெளியில் புறப்பட்டு விட்டனர். நானும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன். அப்பொழுது அவர்கள் தங்கள் மனைவியரின் வீடுகளுக்குச் சென்று அவர்களுக்கு 'ஸலாம்' கூறினார்கள்.

அச்சமயம் அவர்கள் (மனைவிகள்) நபி (ஸல்) அவர்களை நோக்கி, 'நாயகமே! தாங்கள் தங்களின் (புது) மனைவியை எவ்வாறு அடையப் பெற்றீர்கள்?' என்று கேட்டனர். பின்னர் மக்கள் ஜைனப் (ரலி) அவர்களின் வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டனர் என்ற செய்தியை, நானோ அல்லது வேறு எவரோ நபி (ஸல்) அவர்களுக்கு அறிவிக்கவே, அவர்கள் எழுந்து ஜைனப் (ரலி) அவர்களின் வீட்டிற்குள் சென்றனர். நானும் அவர்களுடன் நுழைந்தேன். அப்பொழுது அவர்கள் தங்களுக்கும் எனக்கும் இடையே ஒரு திரையிட்டனர். அதே நேரத்தில் திரை பற்றி இறைவனின் திருவசனம் இறங்கி அது பற்றி மக்களுக்கு எடுத்துரைக்கப்பட்டது.

*அறிவிப்பவர்: அனஸ் (ரலி),*

*நூல்: முஸ்லிம், நஸயீ*

**கேள்வி: அன்னை ஜைனப் (ரலி) அவர்கள் காரணமாக அல்லாஹ் அருளிய கட்டளை என்ன?**

பதில்: "ஈமான் கொண்டவர்களே! உணவிற்காக உங்களுக்கு அனுமதி அளிக்கப்படும் வரையில் அது தயார் ஆவதை

எதிர்பார்த்தவர்களாக நபியினுடைய வீடுகளில் நுழைந்து விடாதீர்கள். எனினும், நீங்கள் (விருந்துண்பதற்கு) அழைக்கப் பட்டால் அப்பொழுது உள்ளே செல்லுங்கள். எனவே நீங்கள் உணவை அருந்தி விட்டால் எந்தப் பேச்சிலும் ஈடுபடாதவர்களாக கலைந்து விடுங்கள். நிச்சயமாக அ(வ்வாறு பேசிக் கொண்டிருப்ப)து நபிக்குத் தொல்லையைக் கொடுக்கும். அவரோ உங்களிடம் (இதனைக்கூற) வெட்கப்படுவார்.

"அல்லாஹ்வோ உண்மையைக் கூற வெட்கப்படமாட்டான். (அவருடைய மனைவிகளான) அப்பெண்களிடம் ஏதேனுமொரு பொருளை நீங்கள் கேட்(க வேண்டியதேற்பட்)டால், அப்பொழுது திரைக்கப்பாலிருந்தே அவர்களிடம் கேளுங்கள். அது உங்களுடைய இருதயங்களையும், அவர்களுடைய இருதயங்களையும் மிகவும் பரிசுத்தமாக்கி வைக்கும். அல்லாஹ்வுடைய தூதருக்கு நீங்கள் தொல்லை கொடுப்பதும் உங்களுக்குத் தகுமானதல்ல. அவருடைய மனைவிகளை அவருக்குப் பின்னர் ஒரு பொழுதும் நீங்கள் விவாகம் செய்து கொள்ளவும் கூடாது. நிச்சயமாக இது அல்லாஹ்விடம் (பாவத்தில்) மகத்தானதாக இருக்கின்றது."

**கேள்வி: மேற்கூறிய இறை கட்டளையின் கருத்து என்ன?**

பதில்: விருந்துக்குச் செல்பவர்கள் விருந்து உண்பதற்கு வீட்டின் உரிமையாளர்கள் உள்ளே வருமாறு அழைத்தாலன்றித் தாமே உள்ளே நுழையக் கூடாது.

அவ்வாறு உள்ளே சென்று விருந்து உண்டு விட்டால் அவ்வீட்டாருக்குத் தொல்லை கொடுக்காமல் உடனே வெளியேறி விட வேண்டும் என்பதே அதன் கருத்துச் சுருக்கமாகும்.

**கேள்வி: "ஏதும் பொருள் கேட்பதானால் திரைக்கு அப்பாலிருந்தபடியே கேளுங்கள்" என்று வருகின்ற வசனத்தின் கருத்து என்ன?**

பதில்: இவ்வசனத்தில் கூறப்பட்டுள்ள கட்டளை முஸ்லிம்கள் அனைவருக்கும் பொதுவானதாகும். அதாவது ஒரு முஸ்லிம், பிற முஸ்லிமின் வீட்டிற்குச் சென்றால், மூன்று முறைகள் அனுமதி கேட்க வேண்டும். ஒவ்வொரு முறையும் அனுமதி கேட்க வேண்டும். ஒவ்வொரு முறையும் அஸ்ஸலாமு அலைக்கும் யா அஹ்லல் பைத்தி – வீட்டுக்கு உரியவர்களே உங்கள் மீது அல்லாஹ்வின் சாந்தி உண்டாகட்டும்'' என்று சொல்லி, தம்முடைய பெயரையும் கூறி, இன்னார் உள்ளே வரலாமா என்று கேட்க வேண்டும். பதில் கிடைக்கவில்லையென்றால் சிறிது தாமதித்து, மீண்டும் அனுமதி கேட்க வேண்டும். அனுமதி கிடைத்தால் உள்ளே செல்ல வேண்டும். இல்லையென்றால் கோபமோ, பொறாமையோ கொள்ளாமல் திரும்பி வந்து விட வேண்டும்.

ஹஸ்ரத் அனஸ் (ரலி) அவர்கள் திரு மதீனாவுக்கு வரும் பொழுது பத்து வயதுச் சிறுவராக இருந்தார்கள். அவர்கள் கூறுகிறார்கள்: ''நான் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு 10 ஆண்டுகள் பணிவிடை செய்தேன். அவர்கள் இவ்வுலகத்தை விட்டும் மறைந்தபொழுது, நான் இருபது வயது இளைஞனாக இருந்தேன். பெண்கள் திரைமறைவில் இருக்க வேண்டும் என்று இறைவன் அருளியுள்ள செய்தி பற்றி நான் மிகவும் அறிந்திருக்கிறேன். நபி (ஸல்) அவர்கள் ஜைனப் (ரலி) அவர்களைத் திருமணம் செய்து கொண்டு முதல் இரவை முடித்துக் கொண்ட காலையில் வலீமா (திருமண) விருந்துக்கு ஏற்பாடு செய்தார்கள்.

''அதற்குப் பெருங்கூட்டத்தினரை அழைத்திருந்தார்கள். அனைவரும் வந்திருந்தனர். விருந்துண்டு விட்டுச் சென்றனர். ஒரு சிலர் மட்டும் விருந்து உண்டு பெருமானார் (ஸல்) அவர்களுடைய வீட்டில் நீண்ட நேரம் தங்கியிருந்து பேசிக் கொண்டிருந்தனர். அவர்களை வெளியேறுமாறு சொல்ல முடியாத நபி (ஸல்) அவர்கள், தாங்களே வீட்டை விட்டு வெளியேறினார்கள். நானும் அவர்

களுடன் வெளியில் வந்தேன். அப்படியேனும் அவர்கள் வெளியேறி விடுவார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் நினைத்தார் கள். நானும், அவர்களும் ஹஸ்ரத் ஆயிஷா (ரலி) அவர்களுடைய அறை வரை வந்து விட்டுச் சிறிது நேரம் பொறுத்து அங்கு சென்றோம். அவர்கள் வெளியேறிருப்பார்கள் என்று எண்ணினோம். ஆனால் அச்சிலர், அப்பொழுதும் பேசிக் கொண்டுதான் இருந்தார்களே தவிர வெளியேறவில்லை. மீண்டும் நாங்கள் அங்கிருந்து வெளியேறி வந்து ஹஸ்ரத் ஆயிஷா (ரலி) அவர்களின் அறை வரை வந்து விட்டுத் திரும்பவும் ஜைனபின் வீட்டுக்குச் சென்றோம். அப்பொழுது தான் அவர்கள் வெளியேறி இருந்தார்கள். உடனேயே நபி (ஸல்) அவர்கள் எனக்கும் அவர்களுக்குமியிடையே திரை போட்டு விட்டார்கள். அவர்கள் அந்த அறையிலிருக்கும் பொழுதே இவ்வசனம் இறக்கப்பட்டது.

*அறிவிப்பவர்கள்: அனஸ் இப்னு மாலிக் (ரலி)*

*நூல்: புகாரி, முஸ்லிம்*

**கேள்வி: இந்தச் சட்டம் அருளப்படுவதற்கு முன் உள்ள நிலை என்ன?**

பதில்: இச்சட்டம் அருளப்படுவதற்கு முன்னர் பெண்கள் வெளியில் சாதாரணமாகப் போய் வந்து கொண்டிருந்தார்கள். தங்கள் வீடுகளில் கழிப்பிடம் (கக்கூஸ்) இல்லாத காரணத்தால் வெளியிடங்களுக்கு அவர்கள் சென்று வருவார்கள். இச்சட்டம் வந்த பின்னர் அவர்கள் வீட்டங்கிஇருக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டதால் கழிப்பிடங்களை வீடுகளிலேயே அமைத்துக் கொண்டனர்.

**கேள்வி: ஃபர்தாவின் சட்டம் எப்பொழுது ஏற்பட்டது?**

பதில்: ஒரு முறை ஹஸ்ரத் உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நல்லவரும் கெட்டவரும் உங்களிடம் (வீட்டினுள்) நுழைகின்றனர். முஃமின்களான தாய்மார்களை

(உங்களுடைய மனைவிகளை) திரை மறைவில் இருந்து கொள்ளுமாறு நீங்கள் ஏவினால் நன்றாக இருக்குமே" எனக் கூறினார்கள். அப்பொழுதே (பெண்கள்) திரை மறைவில் இருக்க வேண்டுமென்ற வசனம் இறக்கப்பட்டது.

இது இறங்கிய சமயம் நபி (ஸல்) அவர்கள் ஹஸ்ரத் ஜைனப் (ரலி) அவர்களைத் திருமணம் செய்து கொண்ட தினத்தின் காலை நேரமாகும். ஹிஜ்ரி 5–ம் ஆண்டு, துல்கஃதா மாதத்தில் இது நடந்தது.

*அறிவித்தவர்கள்: ஹஸ்ரத் அனஸ் (ரலி)*

*நூல்: புகாரீ*

**கேள்வி: அன்னை ஜைனப் (ரலி) அவர்களின் குணநலன்கள் யாவை?**

பதில்: அன்னை அவர்கள் ஏழை எளியவர்கள் மீது இரக்கம் கொண்டவர்களாகவும், தாராள மனம் கொண்டவர்களாகவும், தர்ம காரியங்களை அதிகம் செய்பவர்களாகவும் இருந்தனர்.

**கேள்வி: அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஜைனப் (ரலி) அவர்களின் தர்ம குணம் பற்றிக் கூறியது என்ன?**

பதில்: "உங்களில் எவருடைய கை நீளமாக இருக்கிறதோ அவரே முதன் முதலாக என்னுடன் வந்து சேர்வார்" என்று கூறினர்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்ட அன்னையவர்கள் என்ன செய்தனர்?**

பதில்: ஒவ்வொருவரும் தங்கள் கைகளை அளவு எடுத்தனர். அண்ணலார் கூறியதன் விளக்கம் என்னவென்றால், "ஸதகா செய்வதற்காக உங்களில் எவரின் கை நீளுகின்றதோ அவரே என்னை முதலில் வந்து அடைவார்" என்பதாகும். அவ்வகையில் அன்னை ஜைனப் (ரலி) அவர்கள் அதிகமாக ஸதக்கா செய்ததன் மூலம் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின் முதன்மையாக அவர்களை அடைந்து கொண்டார்கள்.

**கேள்வி: இவர்களின் மரணம் எப்பொழுது நிகழ்ந்தது?**

பதில்: இவர்கள் ஹிஜ்ரி 20–ல் காலமானார்கள். தங்கள் மரணத்துக்குரிய கஃபன் துணிகளையெல்லாம் இவர்களே தயார் செய்து வைத்திருந்தார்கள்.

**கேள்வி: இவர்களின் ஜனாஸாத் தொழுகையை நடத்தியவர்கள் யார்?**

பதில்: ஹஸ்ரத் உமர் (ரலி) அவர்கள் ஜனாஸாத் தொழுகையை நடத்தினார்கள். உஸா இப்னு ஜஹ்ஷ், அப்துல்லாஹ் இப்னு அபீ அஹ்மத் இப்னு ஜஹ்ஷ் முதலியவர்கள் மண்ணறையில் இறங்கி அவர்களின் உடலை இறக்கினார்கள்.

**கேள்வி: அன்னையார் எங்கே அடக்கப் பெற்றார்கள்?**

பதில்: 'ஜன்னத்துல் பகீஃ' என்னும் கப்ருஸ்தானில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

**கேள்வி: அன்னை ஸைனப் (ரலி) அவர்கள் மரணமாகும் போது அவர்களின் வயது என்ன?**

பதில்: அச்சமயம் அன்னையாருக்கு வயது ஐம்பது.

## 9. அன்னை மைமூனா (ரலி)

**கேள்வி: அன்னை மைமூனா (ரலி) அவர்கள் யாருடைய மகளார் ஆவர்?**

பதில்: உம்முல் முஃமினின் ஹஸ்ரத் மைமூனா (ரலி) அவர்கள், முளர் என்னும் கோத்திரத்தைச் சேர்ந்த ஹாரிது என்பவரின் மகளாவார்.

**கேள்வி: இவர்களை நபி (ஸல்) அவர்கள் எப்பொழுது திருமணம் செய்து கொண்டார்கள்?**

பதில்: நபி (ஸல்) அவர்கள் உம்ராச் செய்வதற்காகத் திரு மக்காவுக்கு ஹிஜ்ரி 7–ம் ஆண்டு வந்த பொழுது மணந்து கொண்டார்கள். திருமணம் நடந்த சமயம் நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம்

உடை அணிந்திருந்தார்கள். உம்ராச் செய்து முடித்த பின், இஹ்ராமைக் களைந்த பிறகு குடும்ப வாழ்க்கையை நடத்தலானார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் அன்னையாரை மணந்தபோது மைமூனா (ரலி) அவர்களின் வயது எத்தனை?**

பதில்: அப்பொழுது அன்னையாரின் வயது 36.

**கேள்வி: எங்கு, எப்பொழுது, எத்தனையாம் வயதில் மரணமானார்கள்?**

பதில்: திரு மக்காவுக்கு அருகில் உள்ள ஸஹிப் என்னும் இடத்தில் தங்களின் 80ம் வயதில் ஹிஜ்ரி 51ம் வருடம் காலமானார்கள்.

**கேள்வி: மைமூனா (ரலி) அவர்களின் தாயார் பெயர் என்ன?**

பதில்: தாயார் பெயர் ஹிந்த் என்பதாகும்.

**கேள்வி: மைமூனா (ரலி) அவர்கள் ஹதீஸ்களை அறிவித்துள்ளார்களா?**

பதில்: ஆம்! அன்னையார் அவர்கள் 76 நபி மொழிகளை அறிவித்துள்ளார்கள்.

# 10. அன்னை ஸஃபிய்யா (ரலி)

**கேள்வி: அன்னை ஸஃபிய்யா (ரலி) அவர்கள் யார்?**

பதில்: அன்னை ஸஃபிய்யா (ரலி) அவர்கள் நபி ஹாரூன் (அலை) அவர்களின் வழித்தோன்றல் ஆவார்கள்.

**கேள்வி: அன்னையாரின் தந்தையின் பெயர் என்ன?**

பதில்: தந்தையின் பெயர் ஹய்யிப்னு அக்தப் என்பதாகும்.

**கேள்வி: தாயின் பெயர் என்ன?**

பதில்: பர்ரா பின்த் ஸம்வால் என்பதாகும்.

**கேள்வி: ஸஃபிய்யா (ரலி) அவர்களின் முதல் திருமணம் யாருடன் நடந்தது?**

பதில்: அவர்களின் முதல் கணவரின் பெயர் ஸலாம் இப்னு மஷ்கம் குரைலி என்பதாகும். அவர் அன்னை அவர்களை மணவிலக்குச்(தலாக்) செய்து விட்டார்.

**கேள்வி: அதன்பின் யாரை மணந்தார்கள்?**

பதில்: கனானா என்பவரை இரண்டாவதாக மணந்தார்கள். இவர் (கனானா) மிகப் பெரிய வணிகராக இருந்தார். கைபர் போரில் இறந்து போனார். அதே போரில் ஸஃபிய்யா நாயகியின் தந்தையும், சகோதரரும் இறந்து விட்டனர்.

**கேள்வி: அதன் பின்னர் நபி (ஸல்) அவர்களை எப்படித் திருமணம் செய்து கொண்டார்கள்?**

பதில்: நபி (ஸல்) அவர்களைத் திருமணம் செய்து கொள்வது போன்று பல கனவுகள் கண்டார்கள். இதோ! அவர்களே கூறுகிறார்கள்: "ஒருமுறை வெண்மதி என்மடியில் வந்து விழுவது போல் கனவு கண்டேன். நான் இதை என் தாயாரிடம் கூறினேன். இதைக் கேட்ட என் தாயார் பலமாக என் முகத்தில் ஒரு குத்தினை விட்டு, "நீ அரபு நாட்டின் அதிபர் முஹம்மதை மணந்து கொள்ள ஆசைப்படுகிறாயா?" என்று கேட்டனர். தாயார் விட்ட குத்தால் என் முகத்தில் காயம் ஏற்பட்டு விட்டது. அந்த அடையாளம் நபி (ஸல்) அவர்களைத் திருமணம் செய்யும் வரையும் இருந்தது.

**கேள்வி: அன்னை ஸஃபிய்யாவை அண்ணலார் எப்பொழுது திருமணம் செய்து கொண்டனர்?**

பதில்: ஹிஜ்ரி 7–ம் ஆண்டு நபி (ஸல்) அவர்கள் படையுடன் கைபரை அடைந்தார்கள். ஏறத்தாழ பத்து நாட்கள் போராடி, அங்கிருந்த யூதர்களின் கோட்டைகள் அனைத்தையும் வென்றார்கள். இப்போராட்டத்தில் அன்னை ஸஃபிய்யாவின் இரண்டாம்

கணவன் கொல்லப்பட்டான். அவன் கொல்லப்படுவதற்குச் சில நாட்களுக்கு முன்னர் அன்னை ஸஃபிய்யா (ரலி) அவர்கள் கனவு ஒன்று கண்டார்கள். அதைப் பற்றி அவர்கள் கூறுகிறார்கள்: ''சூரியன் என் மார்பில் விழுந்ததாகக் கனவு கண்டேன். இக்கனவு பற்றி என் கணவரிடம் கூறினேன். இதனைக் கேட்ட என் கணவர் ''நம் மீது படை நடத்தி வந்துள்ள அந்த அரபு நாட்டு மன்னர் முஹம்மதை மணந்து கொள்ள விரும்புகிறாயா'' எனக் கேட்டு விட்டு என்னை ஏசினார்.

கைபர் போர் முடிவு பெற்றது. வெற்றி பெற்ற முஸ்லிம்கள் ஆண்களையும், பெண்களையும் கைது செய்தனர். அக்கைதிகளில் அன்னை ஸஃபிய்யாவும் ஒருவர் ஆவார். அச்சமயம் நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவரான வஹிய்யா என்பவர் 'அல்லாஹ்வின் தூதரே! எனக்கோர் அடிமைப் பெண் வேண்டு' மென்றார்கள். 'நீர் விரும்பியவரை அழைத்துச் செல்லும்' என்று நபி (ஸல்) கூறினார்கள். வஹிய்யா அன்னை ஸஃபிய்யா அவர்களை அழைத்துச் சென்றார்.

அச்சமயம், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! ஸஃபிய்யா அவர்களின் தந்தை 'பனூ நுளைர்' கூட்டத்தின் தலைவர். தாயார் 'பனூ குலைர்' கூட்டத்தின் தலைவரின் மகள். ''அவ்விருவரின் மகளான ஸஃபிய்யா 'பனூ நுளைர், 'பனூ குரைலா' ஆகிய இரு வகுப்பாருக்கும் தலைவர் என்று சிறப்பாகக் கருதப்படுகிறார்கள். ஆகவே, ஸஃபிய்யா அவர்கள் தங்களுக்கு மட்டுமே தகுதியானவர் ஆவார்கள். தாங்கள் நண்பர் வஹிய்யாவுக்குக் கொடுத்து விட்டீர்களே!'' என்று ஒரு நபித் தோழர் கூறினார். மீண்டும் ஸஃபிய்யா அவர்கள் அண்ணலாரிடமே ஒப்படைக்கப்பட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் ஸஃபிய்யா அவர்களை விடுதலை செய்து திருமணம் செய்து கொண்டனர். திருமணத்தின் மூலம் அன்னை ஸஃபிய்யா (ரலி) கண்ட கனவும் உண்மையாயிற்று.

**கேள்வி: அன்னை ஸஃபிய்யாவின் இயற்பெயர் என்ன?**

பதில்: ஜைனப் என்பதாகும். நபி (ஸல்) அவர்கள் தங்களுக்காக அவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவே, அது முதல் 'ஸஃபிய்யா – தேர்வு செய்யப்பட்டவர்' என்னும் பெயர் அவர்களுக்கு வழங்கலாயிற்று.

**கேள்வி: இத்திருமணம் எங்கு நடந்தது?**

பதில்: கைபருக்கும், மதீனாவுக்கும் மத்தியில் காட்டில் பயணத்தின் பொழுது நடைபெற்றது.

**கேள்வி: 'வலீமா' விருந்து கொடுக்கப்பட்டதா?**

பதில்: தம் தோழர்களை நோக்கி, 'உங்களிடமுள்ள உணவுப் பொருள்களைக் கொண்டு வாருங்கள்' என்று முஸ்லிம் வீரர் களுக்கு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டனர். அச்சமயம் வீரர் களில் சிலர் பேரீச்சம் பழம், நெய், மாவு முதலியவற்றைக் கொண்டு வந்து கொடுத்தனர். அவற்றை ஒன்றாகக் கலந்து கொண்டு 'மலீதா' செய்து 'வலீமா' விருந்து படைக்கப்பட்டது. இங்கு மூன்று நாட்கள் தங்கினார்கள். புதுப் பெண்ணுடன் மதீனா வந்தடைந்த நபி (ஸல்) அவர்கள் ஸஃபிய்யா (ரலி) அவர்களை ஹாரிஸ் இப்னு நுஃமான் என்பவரின் வீட்டில் இருக்கச் செய்தார்கள்.

**கேள்வி: அன்னை ஸஃபிய்யாவின் நற்பண்புகள் யாவை?**

பதில்: அன்னையவர்கள் நற்குணங்கள் அனைத்தும் கைவரப் பெற்றவர்களாகத் திகழ்ந்தார்கள். ஆழ்ந்த ஞானமும், அறிவும் பெற்றவர்கள் எனப் புகழப்படுகிறார்கள். நபி (ஸல்) அவர்களின் மீது அதிகமான அன்பு வைத்திருந்தார்கள். ஒரு முறை நபி (ஸல்) அவர்களுக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டபோது அதனைப் பொறுத்து கொள்ள முடியாத அன்னையவர்கள்,

“இந்த நோய் எனக்கு வந்திருக்கக் கூடாதா?” என்று கவலையுடன் கூறியபோது, அருகில் இருந்த மற்ற மனைவியர்கள்.

அன்னை ஸஃபிய்யா (ரலி) அவர்களை உற்றுப் பார்த்தனர். இவற்றைக் கவனித்த நபி (ஸல்) அவர்கள், "ஸஃபிய்யா கூறியது உண்மையான வார்த்தைகள் (உள்ளொன்று வைத்துப் புறமொன்று கூறவில்லை.)" என்று கூறினார்கள். மேலும், இரக்கக் குணமும், தயாள எண்ணமும் பெற்றுத் திகழ்ந்தார்கள்.

**கேள்வி: அன்னையார் எப்பொழுது, எங்கு மரணமானார்கள்?**

பதில்: ஹிஜ்ரி 50–ம் ஆண்டு ரமளான் மாதத்தில், கலீஃபா முஆவியா (ரலி) அவர்களின் காலத்தில் மதீனாவில் மறைந்தார்கள். ஜன்னத்துல் பகீஃவில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

# 11. அன்னை ஜுவைரிய்யா (ரலி)

**கேள்வி: அன்னை ஜுவைரிய்யா யாருடைய மகள்?**

பதில்: பனூ முஸ்தலக் கிளையைச் சேர்ந்த 'ஹாரிது' என்பவரின் மகளாவார்கள்.

**கேள்வி: இவர்களின் முதல் கணவர் யார்?**

பதில்: அன்னை ஜுவைரிய்யாவின் முதல் கணவரின் பெயர் மஸாபிஃ இப்னு ஸஃப்வான் என்பதாகும். இவரும் அன்னை ஜுவைரிய்யா வின் தந்தை ஹாரிதும் இஸ்லாத்தின் பகைவர்களாக இருந்து வந்தனர்.

**கேள்வி: இவர்களை நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு திருமணம் செய்து கொண்டார்கள்?**

பதில்: பனூ முஸ்தலிக் கோத்திரத்தார் இஸ்லாத்தின் எதிரிகளாக இருந்து வந்தார்கள். இவர்கள் 'முரைஸீஃ' என்னும் போரில் தோல்வியடைந்து கைதியாகப் பிடிபட்டுச் சிறையில் அடைக்கப் பட்டனர். சிறைக் கைதியாகப் பிடிக்கப்பட்ட அன்னை ஜுவைரிய்யா, தாபித் இப்னு கைஸ் (ரலி) அவர்களின் பாகத்தில் சேர்க்கப்பட் டார்கள். தாபித் (ரலி) அவர்கள், "ஒரு தொகையைக் கொடுத்து

விட்டு விடுதலைப் பெற்றுக் கொள்ளும்'' எனக் கூறினார்கள். உரிமைப் பணம் கொடுப்பதற்காக ஜுவைரிய்யா அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ''நான் ஏற்கெனவே முஸ்லிமாவேன். பனூ முஸ்தலிக் கோத்திரத்தின் தலைவரான ஹாரிதுப்னு அபீளர்ராக் என்பவரின் மகளுமாவேன்'' எனக் கூறினார்கள்.

அவர்கள் கூறியதைக் கேட்ட பின் நபி (ஸல்) அவர்கள், ''உம்முடைய கோரிக்கைக்கு அதிகமான உதவிகள் செய்யட்டுமா?'' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டனர். 'அது என்ன உதவி? என்று ஜுவைரிய்யா அவர்கள் கேட்டபோது, ''உமக்கு ஏற்படுத்தப்பட்ட தொகையை நான் கொடுத்து விடுகிறேன். உம்மையும் திருமணம் செய்து கொள்கிறேன்'' என்று கூறினார்கள். இதைக் கேட்ட ஜுவைரிய்யா அவர்கள் மிகவும் மகிழ்ந்தவர்களாக ஒப்புக் கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் பணத்தைக் கொடுத்து விடுதலைச் செய்து மணந்து கொண்டார்கள்.

**கேள்வி: அன்னை ஜுவைரிய்யா (ரலி) அவர்களின் இயற்பெயர் என்ன?**

பதில்: பெற்றோர் வைத்த பெயர் 'பர்ரா' என்பதாகும். நபி (ஸல்) அவர்கள் அப்பெயரை மாற்றி, ஜுவைரிய்யா என்று வைத்தனர்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் எந்த ஆண்டில் ஜுவைரிய்யா (ரலி) அவர்களை மணந்தார்கள்?**

பதில்: ஹிஜ்ரி 5–ம் ஆண்டு மணந்து கொண்டனர்.

**கேள்வி: அன்னையாரின் மரணம் எப்பொழுது ஏற்பட்டது?**

பதில்: ஹிஜ்ரி 50–ம் ஆண்டு ரபீயுல் அவ்வல் மாதத்தில் அப்பொழுது அவர்களின் வயது 65.

**கேள்வி: அவர்கள் எங்கு அடக்கம் செய்யப்பட்டார்கள்?**

பதில்: ஜன்னத்துல் பகீஃ என்னும் கப்ருஸ்தானில் அடக்கம் செய்யப்பட்டார்கள்.

**கேள்வி: அன்னை ஜுவைரிய்யா (ரலி) அவர்களின் சிறப்புகள் யாவை?**

பதில்: அன்னை அவர்கள் அதிகமாக இறைவனை வணங்குபவர் களாகவும், நோன்பு நோற்பவர்களாகவும் இருந்து வந்தனர்.

அன்புச் சகோதரிகளே! இவ்வரலாறுகளைப் படிக்கின்ற நீங்கள் அவற்றை உங்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுக முயற்சி செய்ய வேண்டும்.

(நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்களுடைய வரலாறு சம்மந்தமான கேள்வி பதில் முற்றுப் பெற்றது.)

# 12. வீராங்கனை ஸஃபிய்யா (ரலி)

**கேள்வி: ஸஃபிய்யா என்பவர்கள் யார்?**

பதில்: இவர்கள் அப்துல் முத்தலிப் அவர்களின் மகளாவார்கள். இவர்கள் நபி (ஸல்) அவர்களின் மாமியும் ஆவார்கள்.

**கேள்வி: இவர்கள் போரில் காட்டிய வீரம் எத்தகையது?**

பதில்: இவர்களுடன் மற்ற பெண்களும், குழந்தைகளும் ஒரு கோட்டையில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தனர்.

**கேள்வி: அக்கோட்டை எந்த இடத்தில் இருந்தது?**

பதில்: 'பனூ குரைலா' வர்க்கத்தினர் வசிக்கும் இடத்தில் இருந்தது. இப்பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் ஹஸ்ரத் ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரலி) அவர்கள் பாதுகாப்பாக இருந்தார்கள்.

**கேள்வி: எதிரிகளாகிய யூதர்கள் என்ன செய்தார்கள்?**

பதில்: முஸ்லிம்கள் அகழியின் பக்கம் போரிட்டுக் கொண்டிருந் ததால் இக்கோட்டையில் ஆண்கள் எவரும் இருக்கமாட்டார்கள் என்ற தவறான எண்ணத்தில், கோட்டையைத் தாக்க யூதர்கள் திட்டமிட்டார்கள். எனவே, எதற்கும் அங்குள்ள நிலையைத் தெரிந்து

வருவதற்காக ஒரு யூதனைக் கோட்டையின் பக்கம் அனுப்பி வைத்தனர். அவன் அக்கோட்டையின் பக்கம் வந்து, அதனை எப்படித் தாக்கலாம் என்று நோட்டமிட்டுக் கொண்டிருந்தான்.

**கேள்வி: இவனைக் கோட்டையினுள் இருந்து கவனித்தது யார்?**

பதில்: ஹஸ்ரத் ஸஃபிய்யா அம்மையார் அவர்கள், ஹஸ்ஸான் இப்னு ஸாபித் அவர்களை நோக்கி, "அதோ அந்த யூதனைக் கொன்று விட்டு வாருங்கள்" என்று கூறினார்கள்.

**கேள்வி: அதற்கு ஹஸ்ஸான் என்ன பதில் சொன்னார்கள்?**

பதில்: அதற்கு ஹஸ்ஸான், "அப்துல் முத்தலிபின் மகளே! அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக! அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அக்காரியத்தைச் செய்வதற்குச் சக்தி பெறவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள்" என்றார்கள்.

**கேள்வி: ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் ஏன் அவ்வாறு கூறினார்கள்?**

பதில்: காரணம் அவர்கள் உடல் நலம் குன்றி பலவீனமானவர்களாக இருந்தார்கள்.

**கேள்வி: ஸஃபிய்யா அம்மையார் என்ன செய்தார்கள்?**

பதில்: உடனே வீறு கொண்டு எழுந்து, கூடாரத்தின் மூலையில் கிடந்த ஒரு கம்பை எடுத்துக் கொண்டு, கோட்டையிலிருந்து வெளிவந்து, அந்த யூதனைக் கம்பால் ஓங்கி அடித்துக் கொன்று விட்டார்கள்.

**கேள்வி: பிறகு அந்த யூதனை என்ன செய்தார்கள்?**

பதில்: கோட்டைக்கு வந்து, "ஹஸ்ஸானே! நீங்கள் சென்று அவனின் உடைகளையும், ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு வாருங்கள், அவன் ஓர் ஆணாக இருப்பதால் அதனை என்னால் செய்ய முடியவில்லை" என்றனர்.

**கேள்வி: அதற்கு ஹஸ்ஸான் (ரலி) அவர்கள் என்ன கூறினார்கள்?**

பதில்: அவர்களே அக்காரியத்தையும் செய்து அந்த யூதனின் தலையை வெட்டிக் கோட்டைக்கு வெளியே வீசினார்கள். இந்த சம்பவம் யூதர்களுக்குத் தெரிந்ததும், கோட்டையினுள் வீரர்கள் இருப்பதாக எண்ணிக் கொண்டு, கோட்டையைத் தாக்கும் எண்ணத்தைக் கை விட்டார்கள்.

**கேள்வி: ஹஸ்ரத் ஸஃபிய்யாவின் மரணம் எப்பொழுது நிகழ்ந்தது?**

பதில்: ஹஸ்ரத் உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் மரணமடைந்தார்கள். அச்சமயம் அவர்களுக்கு வயது 73.

**கேள்வி: எங்கே அடக்கம் செய்யப்பட்டார்கள்?**

பதில்: திரு மதீனாவிலுள்ள 'ஜன்னத்துல் பகீஃ' என்னும் கப்ருஸ்தானில் அடக்கம் செய்யப்பட்டார்கள்.

சகோதரிகளே!

இக்காலத்தில் உள்ள பெண்மணிகள் இஸ்லாத்தைப் பற்றியும், இஸ்லாமிய பெண்கள் செய்த வீர தீரச் செயல்கள் பற்றியும் அறிந்து கொள்வதற்குச் சிறிதும் ஆர்வம் காட்டுவதில்லை.

வீட்டு வேலைகளைப் பார்க்கவே தயக்கம் காட்டுகிறார்களே! அவர்கள் எங்கே இஸ்லாமிய வரலாறுகளைக் கூறும் புத்தகங்களைப் படிக்கப் போகிறார்கள்.

அன்றைய பெண்மணிகள் இஸ்லாத்திற்காகச் செய்த தியாகத்தால் தான் நாம் முஸ்லிம்களாகப் பெயர் அளவிலேனும் இருந்து கொண்டிருக்கிறோம் என்பதை மறந்து விடாதீர்கள்.

முஸ்லிம் பெண்கள் தங்களால் முடிந்த அளவுக்கு இஸ்லாத்துக்காக ஏதேனும் ஒரு வகையில் தியாகம் செய்தே தீர வேண்டும்.

நம் பிள்ளைகளை அந்த வகையில் தியாகம் செய்யக் கூடியவர்களாக உருவாக்க வேண்டும்.

அல்லாஹ் நமக்கும், நம் பிள்ளைகளுக்கும் தியாக மனப்பான்மையைத் தந்தருள்வானாக! ஆமீன்!

# 13. அஸ்மா பின்த் எஜீத் (ரலி)

**கேள்வி: அஸ்மா பின்த் எஜீத் என்பவர்கள் யார்?**

பதில்: இப்பெண் ஸஹாபி 'எர்மூக் போரில்' கலந்து கொண்ட வீரத் தாய் ஆவார்கள்.

**கேள்வி: இவர்கள் எப்பொழுது இஸ்லாத்துக்கு வந்தார்கள்?**

பதில்: மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் வந்த பின்னர் இஸ்லாத்தில் சேர்ந்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் கைகளில் பைஅத் செய்து கொள்ள விரும்பினார்களா?**

பதில்: ஆம்! இவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், "பெண்கள் தங்கள் கைகளில் உறுதி மொழி எடுத்துக் கொள்ள விரும்புகிறோம்; தாங்கள் தங்கள் கைகளை நீட்டுங்கள்" என்றனர்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் அஸ்மா (ரலி)வுக்கு 'பைஅத்' செய்து கொடுத்தார்களா?**

பதில்: "நான் அந்நியப் பெண்களின் கைகளைத் தொட மாட்டேன்" என்று நபி (ஸல்) கூறி விட்டார்கள்.

**கேள்வி: பைஅத் என்றால் என்ன பொருள்?**

பதில்: 'பைஅத்' என்றால் "விற்றுவிடுவது" என்பது பொருளாகும். அதாவது அல்லாஹ்வின் பாதையில் உடல், பொருள், உயிர் ஆகிய மூன்றையும் விற்று விடுதல் என்பது இதன் கருத்தாகும்.

இம்மூன்றையும் அல்லாஹ்வின் பாதையில் தியாகம் செய்து விடுவதாக வாக்குறுதி அளிப்பதாகும்.

**கேள்வி: பெண்களுக்கு நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு பைஅத் செய்து கொடுத்தார்கள்?**

பதில்: நபி (ஸல்) அவர்கள் திரு விரலைத் தண்ணீரில் நனைத்து, அத்தண்ணீரைப் பெண்களிடம் கொடுத்தார்கள். அத்தண்ணீரில் பெண்கள் தங்கள் கைகளை நனைத்துக் கொண்டார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களிடம் அஸ்மா (ரலி) அவர்கள் கேட்ட கேள்வி என்ன?**

"அல்லாஹ்வின் தூதரே! பெண்களாகிய நாங்கள், வீடுகளில் மறைவாக இருந்து வருகிறோம். ஆண்கள் தங்கள் தேவைகளை எங்களிடம் நிறைவேற்றிக் கொள்கின்றனர். நாங்கள் அவர்களுடைய குழந்தைகளை வயிற்றில் சுமக்கிறோம். எனினும் எங்களை விட ஆண்கள் நற்செயல்களில் அதிகமாக ஈடுபட்டு நன்மைகளைப் பெற்றுக் கொள்கின்றனரே?

"அவர்கள் ஜுமுஆத் தொழுகைகளிலும், ஜமாஅத் தொழுகைகளிலும் கலந்து கொள்கின்றனர்; நாங்கள் அவற்றில் கலந்து கொள்ள முடியாதவர்களாக இருக்கின்றோமே?" என்று கேள்வி கேட்டனர்.

பதில்: நபி (ஸல்) அவர்கள் அளித்த பதில் என்ன?

நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களை நோக்கி, "இவ்வாறு கேள்வி கேட்ட பெண்ணை நீங்கள் கண்டுள்ளீர்களா?" என்று கேட்க, "நாங்கள் இது போன்ற பெண்ணைக் கண்டதேயில்லை," என்று ஸஹாபாக்கள் கூறினர்.

நபி (ஸல்) அவர்கள் அஸ்மா (ரலி) அவர்களைப் பார்த்து, "மனைவி கணவனின் திருப்தியையும், மகிழ்ச்சியையும் பெற்றுக் கொள்ளத் தக்கவாறு நடந்தும், கணவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை முறையாகச் செய்தும் வருவாளாயின், கணவனுக்குக் கிடைக்கும் நன்மையின் அளவே மனைவிக்கும் கிடைக்கும்" என்று கூறினார்கள்.

**கேள்வி: அஸ்மா (ரலி) அவர்கள் கலந்து கொண்ட போர் எது?**

பதில்: ஹிஜ்ரி 15–ம் ஆண்டில் யர்முக் என்னும் போர் ஆரம்பமாயிற்று. இப்போரில் அன்னை அஸ்மா (ரலி) அவர்களும் கலந்து கொண்டார்கள்.

பல வீர தீரச் செயல்களையும் போரில் செய்து காட்டினார்கள்.

**கேள்வி: அந்த வீர தீரச் செயல்கள் என்ன?**

பதில்: போரின் நடுவே தங்கள் கூடாரத்தில் அடிக்கப்பட்டிருந்த முளைக் குச்சியை எடுத்து, ரோம் நாட்டின் ஒன்பது வீரர்களை அடித்துக் கொன்றார்கள்.

**கேள்வி: அஸ்மா (ரலி) அவர்களின் மரணம் எங்கே நிகழ்ந்தது?**

பதில்: அது பற்றித் தெளிவாக அறிய முடியவில்லை.

**கேள்வி: அஸ்மா (ரலி) அவர்கள் ஹதீஸ்களை அறிவித்துள் ளார்களா?**

பதில்: ஆம்! பல ஹதீஸ்களை அறிவித்துள்ளார்கள். அறிவிலும், நல்லொழுக்கப் பண்பிலும் சிறந்து விளங்கினார்கள். மேலும், விருந்தினர் களை வரவேற்று நன்முறையில் அவர்களுக்குப் பரிமாறுவார்கள்.

## 14. உம்மு அய்மன் (ரலி)

**கேள்வி: உம்மு அய்மன் (ரலி) என்பவர்கள் யார்?**

பதில்: இவர்களின் இயற்பெயர் 'பரிகா' என்பதாகும். உம்மு அய்மன் என்பது வழக்குப் பெயர் ஆகும்.

**கேள்வி: இவர்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்?**

பதில்: அபிஸீனியா நாட்டைச் சேர்ந்தவர்கள்.

**கேள்வி: இவர்களின் தந்தையின் பெயர் என்ன?**

பதில்: தந்தையின் பெயர் தஃலபா இப்னு அம்ர் என்பதாகும்.

**கேள்வி: உம்மு அய்மன் அடிமைப் பெண்ணா?**

பதில்: ஆம்! இவர்கள் நபி (ஸல்) அவர்களின் அடிமைப் பெண்ணாக இருந்தார்கள். சிறு வயது முதலே இவர்கள் ஹல்ரத் அப்துல்லாஹ் அவர்களிடம் இருந்து வந்தனர்.

ஹல்ரத் அப்துல்லாஹ் இறந்த பின்னர் இவர்கள் அன்னை ஆமினா அவர்களுக்குப் பணிவிடைகள் செய்து வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் பிறந்த பின் அண்ணலாரை வளர்க்கும் பேறு கிடைத்தது.

**கேள்வி: இவர்களை யாருக்குத் திருமணம் செய்து கொடுக்கப்பட்டது?**

பதில்: உபைது இப்னு ஜைத் என்னும் ஸஹாபிக்குத் திருமணம் செய்து கொடுக்கப்பட்டது. உபைது இப்னு ஜைத் அவர்கள் ஹுனைன் என்னும் போரில் பங்கு கொண்டு வீர தீரத்துடன் போரிட்டு அப்போரிலேயே மரண மடைந்தார்கள். பின்னர் இவர்களை நபி (ஸல்) அவர்கள் தம் பணியாள் ஜைதுப்னு ஹாரிதா (ரலி) அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தார்கள்.

**கேள்வி: ஹல்ரத் உம்மு அய்மன் (ரலி) அவர்கள் ஹிஜ்ரத் செய்துள்ளார்களா?**

பதில்: ஆம்! புனித மக்காவில் சகிக்க முடியாத கொடுமைகளை இஸ்லாமியப் பகைவர்கள் செய்த பொழுது, முதலில் அபீஸீனியா நாட்டிற்கு ஹிஜ்ரத்துச் செய்தார்கள். அதன் பின்னர், இரண்டா வதாக அங்கிருந்து மதீனா முனவ்வராவுக்கு ஹிஜ்ரத் செய்தார்கள்.

**கேள்வி: இவர்கள் ஏதும் போரில் கலந்து கொண்டதுண்டா?**

பதில்: ஆம்! இவர்கள் உஹது போரிலும், கைபர் போரிலும் கலந்து கொண்டார்கள். போர்க் களங்களில் காயமுற்ற வீரர்களுக்கு மருத்துவம் செய்வதும், தண்ணீர்க் கொடுப்பதும் இவர்கள் ஆற்றிய சிறப்பான பணிகளாகும்.

**கேள்வி: இவர்களுக்குப் பிள்ளைகள் இருந்தனரா?**

பதில்: ஆம்! அய்மன், உஸாமா என்று இரு பிள்ளைகள் பிறந்தனர். அய்மன் என்பவர் முதல் கணவருக்குப் பிறந்தவர் ஆவார். இந்த அய்மன் நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவராயிருந்தார்.

உஸாமா என்பவர் நபி (ஸல்) அவர்களின் நெருக்கமான அன்பைப் பெற்றவராயிருந்தார். உஸாமாவின் தந்தையும் நபிகளாரின் அன்புக்கு உரியவராக இருந்து வந்தார்.

**கேள்வி: அவ்விரு பிள்ளைகளும் இஸ்லாமியப் போர்களில் கலந்து கொண்டார்களா?**

பதில்: உம்மு அய்மன் (ரலி) அவர்களின் மகன்களில் அய்மன் என்பவர் மட்டும் கைபர் போரில் கலந்து ஷஹீது ஆனார். இவர் வீர மரணம் எய்திய பொழுது அம்மையார் அவர்கள் மிகவும் பொறுமையைக் கடைப்பிடித்தார்கள்.

**கேள்வி: இவர்கள் எப்பொழுது காலமானார்கள்?**

பதில்: ஹல்ரத் உம்மு அய்மன் (ரலி) அவர்கள் ஹல்ரத் உதுமான் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் காலமானார்கள்.

## சிறப்பும் நற்குணமும்

**கேள்வி: அய்மன் (ரலி) அவர்களின் சிறப்பும், நற்குணமும் யாவை?**

பதில்: இவர்களின் முதல் கணவர் இறந்த பின்னர் நபி (ஸல்) அவர்கள், "எவரேனும் சுவர்க்கப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள விரும்பினால் உம்மு அய்மனைத் திருமணம் செய்து கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

இவர்கள் உலகத் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களை வளர்த்த காரணத்தால் அவர்களுக்கு சிறப்பும் மேன்மையும் கிடைத்தது. பல ஹதீஸ்களையும் அறிவித்துள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் உம்மு அய்மன் (ரலி) அவர்களின் வீட்டிற்குச் செல்வார்களாயின், அய்மன் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு 'ஷர்பத்' வழங்குவார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இவர்களை மிகவும் அன்புடன் வரவேற்பார் கள். நபி (ஸல்) அவர்களின் மரணம் இவர்களை எலும்பும் தோலும் ஆக்கி விட்டது. அந்த அளவிற்கு நபி (ஸல்) மீது பாசம் கொண்டிருந்தார்கள்.

# 15. குனஸா (ரலி)

**கேள்வி: குனஸா (ரலி) என்னும் இவ்வீரப் பெண்மணி யார்?**

பதில்: இவ்வீரப் பெண்மணி இரண்டாம் கலீஃபா ஹஸ்ரத் உமருல் ஃபாருக் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் 'காதிஸிய்யா' போரின் பொழுது தங்களின் அருமை மைந்தர்களுக்கு வீர உணர்ச்சியினை ஊட்டிய பெண் ஸஹாபி ஆவார்கள்.

**கேள்வி: இவர்களின் இயற்பெயர் என்ன?**

பதில்: 'தாமலிர்' என்பது இவர்களின் இயற்பெயராகும்.

**கேள்வி: இவர்களுக்குத் திருமணம் நடந்திருந்ததா?**

பதில்: ஆம்! இவர்கள் 'நஜ்த்' என்னும் நகரில் இருந்து வந்தார் கள். அச்சமயம், ரவாஹா இப்னு அப்துல் உஸ்ஸா என்பவருடன் திருமணம் ஆகியிருந்தது. ரவாஹா இறந்தபின் மர்வாஸ் இப்னு அபூ ஆமிர் என்பவரை மறுமணம் செய்து கொண்டார்கள்.

**கேள்வி: இவர்களின் வீர வாழ்க்கை எத்தகையது?**

பதில்: ஹிஜ்ரி 14–ம் ஆண்டு ஈரானியர்களுடன் போரிட வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டு விட்டது. உமர் (ரலி) அவர்களின் கொடியின் கீழ் முஸ்லிம் வீரர்கள் அணிவகுத்து நிற்கின்றனர்.

வீரத் தாய்மார்களோ தம் ஆண் மக்கள் தம் மார்பில் அமுதுண்டதைச் சுட்டிக்காட்டி அவ்விளைஞர்களுக்கு உணர்ச்சியூட்டிக் கொண்டிருந்தனர்.

அவ்வீரத் தாய்மார்களில் குனஸா (ரலி), 'போரில் புறமுதுகு காட்டி ஓடாதீர்கள். அல்லாஹ்வின் பாதையில் உங்கள் தலைகளைத் தத்தம் செய்யுங்கள். சத்தியமே வெல்லும்!'' எனக் கூறி உணர்ச்சி ஊட்டி அனுப்பி வைத்தார்கள்.

**கேள்வி: இவ்வீர உரைகளைக் கேட்ட அவர்களின் பிள்ளைகள் என்ன செய்தார்கள்?**

பதில்: பொழுது புலர்ந்ததும் குனஸா (ரலி) அவர்களின் நான்கு ஆண் மக்களும் வீரத்துடன் போர்க் களம் நோக்கிச் சென்றனர். இறுதியாக ஒருவ்ருக்குப் பின் ஒருவராக வீர மரணம் எய்தினார்கள்.

**கேள்வி: இச்செய்தியைக் கேள்விப்பட்ட கனஸா (ரலி) என்ன செய்தார்கள்?**

பதில்: ''அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்'' என்று கூறி பொறுமையைக் கைக்கொண்டனர்.

**கேள்வி: இவர்கள் எப்பொழுது மரணமானார்கள்?**

பதில்: ஹிஜ்ரீ 24-ம் ஆண்டில் மரணமானார்கள்.

**கேள்வி: இவர்களின் சிறப்புகள் யாவை?**

பதில்: பேச்சு வன்மையிலும், கவிதைகள் இயற்றுவதிலும் தலைசிறந்து விளங்கினார்கள். குனஸா (ரலி)யைப் போல் பெண்களில் வேறு எந்த கவிஞர்களையும் கண்டதே இல்லை எனக் கூறப்படுகிறது.

அந்தோ! இன்றைய தாய்மார்களில் பலர் கோழைகளாகவும், மார்க்கப்பற்று இல்லாதவர்களாகவும், மார்க்க நெறிமுறைகளைத் தம் பிள்ளைகளுக்குக் கற்றுக் கொடுக்காதவர்களாகவும் அன்றோ உள்ளனர்.